# பொருளடக்கம்.

# ஆழ்வார்கள் சரித்ரம்.

## I. அவதாரத்தின் காரணம்.

ஆழ்வார் என்ற வார்த்தைக்கு ஈச்வர பக்தியில் மிகவும் ஆழ்ந்திருப்பவர் என்று அர்த்தம். வைஷ்ணவ மதத்தை இன்னதென்று உலகத்திலுள்ளவர்கள் எல்லாருக்கும் நன்றாக விளக்கிக் காட்டுவதற்காக பத்து ஆழ்வார்கள் லோகத்தில் அவதரித்தார்கள். இவர்களின் பெயர் வருமாறு:—(1) பொய்கையாழ்வார், (2) பூதத்தாழ்வார், (3) பேயாழ்வார், (4) திருமழிசையாழ்வார், (5) நம்மாழ்வார், (6) குலசேகர ஆழ்வார், (7) பெரிய ஆழ்வார், (8) தொண்டரடிப் பொடியாழ்வார், (9) திருப்பாணாழ்வார், (10) திருமங்கையாழ்வார். இந்த ஆழ்வார்களின் அவதாரத்தை ஒரு புதிதான தசாவதாரமென்றே, வைஷ்ணவர்கள் சொல்லுவார்கள். பெரியாழ்வாருக்கு ஆண்டாள் என்ற ஒரு பெண் உண்டு. நம்மாழ்வாருக்கு மதுரகவி யென்ற ஒரு முக்யமான சிஷ்யருண்டு. இந்த இருவர்களையும் சேர்த்து ஆழ்வார்கள் பன்னிரண்டுபேர் என்று சொல்வது வழக்கம். இவர்களில் சூத்ரஜாதியில் பிறந்தவர்களும் இருக்கிறார்கள்.

மனிதர்களை நல் வழிக்குக் கொண்டுவர விஷ்ணு பல தடவைகளில் முயற்சியைச் செய்திருக்கிறார். கடை

சியாய் ரொம்பகாலம் ஆலோசித்து, தன்னுடைய ஆயு தங்களை யெல்லாம் பார்த்து, "நீங்கள் பூலோகத்தில் என்னுடைய உத்தரவு ப்ரகாரம் ஜாதிபேதமில்லாமல் பலவித ஜாதிகளிலும் அவதரித்து, வேதம் முதலிய வற்றின் கருத்தை எல்லாரும் நன்ருய் அறியும்படி செய்துவாருங்கள்" என்று உத்தரவு கொடுத்தார். அந்த உத்தரவு ப்ரகாரம் ஆயுதங்கள் ஆழ்வார்களாக மனுஷ்ய அவதாரஞ் செய்தன. ஆழ்வார்களுக்கு, பிறந்தவுடனே ஞானம் ஈச்வரன் கருணையால் உண் டாயிற்று. இவர்கள் அப்படியே அவதரித்து, தமிழ் பாஷையில் 4000 பாசுரங்களைப்பாடி, லோகத்தை முன்னுக்குக் கொண்டுவந்தார்கள். வரவர ஸம்ஸ்க்ரு தத்தில் ஜனங்களுக்கு பாண்டித்யம் குறைந்து கொண் டேவந்தது. ஸ்திரீகளுக்கும் சூத்ரர்களுக்கும் அதைப் படிக்க முடியாமலிருந்தது. அதற்காக இந்த ஆழ்வார் கள் எல்லாரும் நன்ருய் அறியக்கூடிய தமிழ் பாஷை யில் பாசுரங்களை இயற்றினர்கள்.

இவர்களில் அநேகர் தாம்ப்ரபர்ணி நதிக்கரையி லும், சிலர் காவேரி நதிக்கரையிலும், அவதரித் தார்கள்.

இவர்கள் வைபவத்தை அவரவர்கள் அவதரித்த ப்ரகாரம் இங்கே கூறுகிறோம்.



## II. பொய்கையாழ்வார்.

வைஷ்ணவர்களுக்கு முக்யமான ஸ்தலங்கள் மூன்று. ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சீபுரம். இவைகளை கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று சொல்வது வைஷ்ணவ ஸம்ப்ரதாயம். பொய்கை ஆழ்வார் காஞ்சீபுரத்தில் அவதரித்தார். இந்த ஊருக்குள் ஒரு பக்கத்திற்கு திருவெஃகா வென்றுபெயர். அதின் வடபக்கத்தில் ஒரு பொன்தாமரையுடன் கூடின பொய்கை (குளம்) உண்டு. அந்தப் பொய்கையில் இந்த ஆழ்வார் த்வாபர யுகத்தில் 8,62,901-வதான ஸித்தார்த்தி வர்ஷம் ஐப்பசிமீ சுக்லபக்ஷம் அஷ்டமிதிதி செவ்வாய்க்கிழமை திருவோண நக்ஷத்ரத்தில் அயோநிஜராய் (அதாவது ஸாதாரண மனுஷ்யர்களைப்போல் ஸ்த்ரீக்கும் புருஷனுக்கும் பிறக்காமல்) அவதரித்தார். இவர் விஷ்ணுவின் திருச்சங்கின் அம்சம். இவர் தாமரைப்புஷ்பத்திலிருந்து உண்டானார். இவர் பொய்கையிலிருந்து உண்டானபடியினால், இவருக்கு பொய்கை ஆழ்வார் என்ற பெயர் உண்டாயிற்று. இவருக்குப் பொய்கைமுனி என்ற பெயருமுண்டு.

மங்களாசாஸனம்.*

இந்த ஆழ்வார் ஏழு ஊர்களிலுள்ள பெருமாள்

* மங்களாசாஸனம்:—ஒவ்வொரு ஆழ்வாரும் வைஷ்ணவ க்ஷேத்ரங்களைக் குறித்துப் பாடல்கள் பாடியிருக்கிறார்கள். அந்தப் பாடல்களுக்கு மங்களாசாஸனம் (மங்களவாழ்த்து) என்று பெயர்.

கள் விஷயமாய் பாட்டுக்களைப்பாடியிருக்கிறார். அவை களாவன:—

(1) திருவரங்கம் (2) திருவிண்ணகர் (3) திருக்கோவலூர் (4) திருவெஃகா (5) திருவேங்கடம் (6) திருப்பாற்கடல் (7) பரமபதம்.

அருளிச்செயல்.

இந்த் ஆழ்வார் செய்த பாசுரங்கள் நூறு. அவைகளுக்கு முதல் திருவந்தாதி யென்று பெயர்.

தனியன்.*

இந்த ஆழ்வாரைப்பற்றிய தனியன் முதலியாண்டானால் செய்யப்பட்டது.

"கைதைசேர் பூம்பொழில் சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப்பிரான் கவிஞர் பேரேறு வையத்
தடியவர்கள் வாழவருந் தமிழ்நூற் றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து."

---

* ஒருவருடைய குண விசேஷங்களைச் சொல்லி துதிக்கும் தனிப்பாடல் தனியன் எனப்படும்.

## III. பூதத்தாழ்வார்.

---

இந்த ஆழ்வார் செங்கற்பட்டு ஜில்லா செங்கற்பட்டுக்கு பதினைந்து மைல் கிழக்கேயுள்ள மஹாபலிபுரத்தில் அவதரித்தார். இதை திருக்கடன் மல்லையென்று சொல்வது வழக்கம். இந்த இடத்தில் அநேக வர்ஷங்களாக பல வித்வான்கள் வஸித்து வந்தார்கள். இந்த ஊர் ஸமுத்ரக் கரையோரத்திலிருக்கிறது. ஊருக்குக் கிழக்கே ஸமுத்ரக் கரை ஓரத்தில் புஷ்பங்கள் அடர்ந்த புதர் ஒன்று உண்டு அதில் நீலோத்பல மலரில் (நீலமான புஷ்பங்களுடன் கூடின ஒரு வகைப் பூச்செடி) இந்த ஆழ்வார் அவதரித்தார். இவர் த்வாபர யுகத்தில் 8,62,901-வதான ஸித்தார்த்தி வர்ஷம் ஐப்பசிமீ சுக்லபக்ஷம் நவமிதிதி புதன்கிழமை அவிட்ட நக்ஷத்ரத்தில் அவதரித்தார். முன் கூறப்பட்ட பொய்கையாழ்வார் அவதரித்ததற்கு மறுநாளே இவர் பூமியில் தோன்றினர். இவரும் அயோநிஜர். இவர் கௌமோதகீ யென்ற ஆயுதத்தின் அம்சம். இவர் தன்னுடைய பஞ்ச பூதங்களையும் (ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் இந்த ஐந்துக்கும் பஞ்சபூதங்கள் என்று பெயர்.) ஸ்வாமி விஷயத்தில் மிகவும் ஈடுபடச் செய்ததினல், இவருக்கு பூத்தாழ்வார் என்று பெயர். இவரை பூதமுனி என்றும் சொல்வதுண்டு.

மங்களாசாஸனம்.

இந்த ஆழ்வார் பதிமூன்று ஊர் பெருமாள்கள் விஷயமாய் பாட்டுக்கள் பாடியிருக்கிறார். அவைகளாவன:—(1) திருவரங்கம். (2) தஞ்சை. (3) திருக்குடந்தை (கும்பகோணத்திற்கு வைஷ்ணவர்கள் சொல்லும் பெயர்) (4) திருமாலிருஞ்சோலை. (5) திருக்கோஷ்டியூர். (6) திருத்தண்கால் (7) திருக்கோவலூர் (8) திருக்கச்சி. (9) திருப்பாடகம். (10) திருநீர்மலை. (11) திருக்கடன்மல்லை. (12 திருவேங்கடம். (13) திருப்பாற்கடல்.

அருளிச்செயல்.

இந்த ஆழ்வார் பாடின பாசுரங்கள் நூறு. அவைகளுக்கு இரண்டாம் திருவந்தாதி யென்று பெயர்.

தனியன்.

இவர் தனியன் திருக்குருகைப்பிரான் பிள்ளானால் செய்யப்பட்டது.

“ என்பிறவிதீர விறைஞ்சினே னின்னமுதா
அன்பே தகளி யளித்தானை—நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.”

## IV. பேயாழ்வார்.

இந்த ஆழ்வார் சென்னைப் பட்டணத்திற்கு 6 மைல் தெற்கேயுள்ள மைலாப்பூரில் அவதரித்தார். அந்த ஊருக்கு அந்தக் காலத்தில் திருமயிலை யென்று பெயர். மைலாப்பூரில் ஸ்வாமியின்பெயர் "ஆதிகேசவப்பெருமாள்." ஸ்வாமிக்கு வேண்டிய உபயோகத்திற்காக அங்கே ஒரு கிணறு இருக்கிறது. அந்தக் கிணற்றில் ஒரு ஸமயத்தில் ஒரு செவ்வல்லிப்பூப் பூத்தது. அந்தச் சிகப்பு அல்லிப் பூவிலிருந்து இவர் உண்டானார். இவர் நந்தக மென்ற ஆயுதத்தின் அம்சம். இவர் த்வாபர யுகத்தில் 8,62,901-வதான ஸித்தார்த்தி வர்ஷம் ஐப்பசிமீ சுக்லபக்ஷம் தசமிதிதி வ்யாழக்கிழமை சதய நக்ஷத்ரத்தில் அவதரித்தார். இவரும் அயோநிஜர். இவருக்கு எப்பொழுதும் ஸ்வாமியைக் குறித்துப் பாடுவதே வேலை. ஆகாரம், தூக்கம் முதலியவைகளில் ஆசையே கிடையாது. இவருக்கு ஒரு ஸமயத்திலிருந்த புத்தி அடுத்த ஸமயத்திலிராது. ஒரு ஸமயம் பாடுவர். அடுத்த ஸமயம் ஆடுவர். இப்படி செய்து வந்ததினால் இவரை அநேக ஜனங்கள் பைத்யம் பிடித்தவர் என்றே எண்ணினார்கள். பேயாழ்வார் என்ற பெயர் அதனாலேயே இவருக்கு உண்டாயிற்று.

### மங்களாசாஸனம்.

இவர் பதிநான்கு ஊர்களைப்பற்றிப் பாடியிருக்கி

ரூர். அவைகளாவன:—(1) திருவரங்கம். (2) திருக்குடந்தை. (3) திருவிண்ணகர். (4) திருமாலிருஞ்சோலைமலை. (5) திருக்கோஷ்டியூர். (6) அஷ்டபுஜகரம். (7) திருவேளுக்கை (8) திருப்பாடகம். (9) திருவெஃகா. (10) திருவல்லிக்கேணி. (11) திருக்கடிகை. (12) திருவேங்கடம். (13) திருப்பாற்கடல். (14) பரமபதம்.

அருளிச் செயல்.

இவர் செய்த பாசுரங்கள் நூறு. அவைகளுக்கு மூன்றும் திருவந்தாதி என்று பெயர்.

தனியன்.

இவர் தனியன் குருகை காவலப்பனுல் செய்யப் பட்டது.

"சீராரும் மாடத் திருக்கோவலூ ரதனுள்
காரார் கருமுகிலைக் காணப்புக்கு—ஓராத்
திருக் கண்டேனென் றுரைத்த சீரான் கழலே
உரைக் கண்டாய் நெஞ்சே யுகந்து."

வேறு பெயர்.

இவருக்கு "மஹதாஹ்வயர்" என்ற ஒரு பெயருண்டு. ஏனென்ருல் இவருக்கு ஸ்வாமி யிடத்தில் பக்தி "மஹத்தாய்" (மிகவும் அதிகமாய்) இருந்தது. இரண்டாவது காரணம் என்னவென்ருல், இவர் ஒரு பெரிய (மஹத்தான) கார்யத்தை செய்துவைத்தார். இவருக்குப் பின் திருமழிசை யாழ்வாரென்று ஒருவர் அவதரித்தார். அவர் சைவம், சார்வாகம், ஜைனம் முதலிய மதங்களைக் கைப்பற்றி வந்தார். அவர் முதலில் ஒரு மதத்தை கைப்பற்றுவர். அதிலுண்டான முக்யமான

மனிதர்களைக்கண்டு அவர்களிடமிருந்து ஸகல ஸங்கதிகளையும் அறிந்து அந்த மதத்தை பரவச்செய்வர். பின்னிட்டு அதிலுள்ள கெடுதல்கள் தோன்றவே, அதை விட்டு வேறே ஒரு மதத்தைக் கைப்பற்றுவர். இப்படி பல மதங்களைக் கைப்பற்றி எது நல்லதென்று தெரியாமல் தவித்துவந்தார். அவரை இந்த பேயாழ்வார் சீர்திருத்தி வைஷ்ணவ பக்தராக்கினார். அதைக்குறித்து இவருக்கு அந்தப்பெயர் உண்டாயிற்று.

---

## V. முதலாழ்வார்கள்.

பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் இவர்கள் மூவரும் ஒரே காலத்தில் உலகத்தில் மற்றெல்லா ஆழ்வார்களுக்கும் முன்னதாகத் தோன்றிய படியால், இவர்களுக்கு மொத்தமாய் முதலாழ்வார்கள் என்று பெயர். ஒவ்வொருவரையும் பற்றி தனியாக மேலேயே சொல்லியிருக்கிறோம். இங்கே இவர்கள் மூவருக்கும் பொதுவான விஷயங்களைமட்டும் விவரிக்கிறோம். விஷ்ணுவின் சேனைத்தலைவருக்கு விஷ்வக்ஸேனர் என்று ஸம்ஸ்க்ருதத்திலும், சேனை முதலியார் என்று தமிழிலும் பெயர். விஷ்ணுவின் உத்தரவு ப்ரகாரம் அந்தச் சேனை முதலியாரே பூலோகத்துக்கு வந்து, இந்த முதலாழ்வார்கள் மூவருக்கும் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்தார். இதுவுமல்லாமல், இவர்களுக்கு பலவித மந்த்ரங்களையும், நூல்களையும் நன்றாய்க் கற்பித்துவிட்டு, தன்னுடைய இருப்பிடம் போய்ச்சேர்ந்தார். இவர்கள் ஈச்வர அம்சமாகையினல், எல்லா விஷயங்களையும் அதிக சீக்ரமாகவே கற்றுக்கொண்டார்கள். ஸாதாரண ஜனங்களைப்போல் காலத்தைக் கழிக்காமல் ஈச்வர பக்தியை எப்பொழுதும் செய்து வந்தார்கள்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு இடத்திற்குப்போய் அங்கங்கே வைஷ்ணவ மதத்தைப் பரவச்செய்தார்கள். அப்படி யிருக்கும் பொழுது ஒருநாள் முத

லாழ்வார்கள் மூவரும் ஒன்று சேரும்படி நேர்ந்தது. விழுப்புரத்திற்கு ஸுமார் பத்துமைலுக்கு அப்பால் பெண்ணை யாற்றங்கரையிலுள்ள திருக்கோவலூரில் ம்ருகண்டுமஹரிஷி பல வர்ஷங்களாக ஈச்வரனைக் குறித்துத் தவஞ்செய்து வந்தார். அந்த ஆச்ரமத் திற்கு ஒருநாள் ஸூர்யன் அஸ்தமனமான பின்பு பொய்கை யாழ்வார் போனார். கொஞ்ச நேரத்திற் கெல்லாம் பூதத்தாழ்வாரும் அதே யிடத்திற்குப் போய்ச் சேர்ந்தார். "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத்புவி" என்கிறபடி, ஒருவரை யொருவர் நமஸ்காரம் செய்துகொண்டார் கள். பூதத்தாழ்வார் இரவில் அங்கே தங்குவதற்கு இடம் கொடுக்கவேண்டுமென்று கேட்க, பொய்கை ஆழ்வார் "இங்கே ஒருவர் படுக்கலாம். இருவர் இருக்க லாம்" என்றார். இருவரும் பேசிக்கொண்டிருக்கும் ஸமயத்தில், பேயாழ்வாரும் அங்கேயே வந்து இடம் கேட்க, அவ்விருவர்களும் "இங்கே ஒருவர் படுக்க லாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என் றார்கள். ஆகவே மூவருமாய் இரவு முழுவதையும் பக வானைக் குறித்துப் பேசிக்கழிக்கத் தீர்மானித்தார் கள். நடு ராத்ரி ஆனதும் மழையும், இடியும், மின்ன லும் அதிகமாய் உண்டாயிற்று திருக்கோவலூர் பெருமாளான "த்ரிவிக்ரம மூர்த்தி" அங்கே அந்த ஸமயம் அவர்களை கருணையுடன் பார்க்கவந்தார். நெருக்கம் மிகவும் அதிகமாயிருந்தது. இன்ன காரண மென்று இவர்களுக்குத் தெரியவில்லை. மழையின்

கொடுமையினுல் வெளியில் போகவும் முடியவில்லை. க்ஷணத்துக்கு க்ஷணம் நெருக்கம் அதிகப்பட்டது. மூவரும் ஞானக்கண்களால் தங்களை நெருக்குவது விஷ்ணுபகவான் என்று அறிந்து அவரை ஸ்தோத்ரம் செய்தார்கள். முதல், இரண்டு, மூன்றும் திருவந்தாதிகள் இந்த ஸமயத்தில்தான் பாடப்பட்டன. இவர்களுடைய பக்தியை நன்ருய் விளக்கக்கூடிய சில பாசுரங்களை இங்கு எழுதுகிறோம்.

பொய்கை ஆழ்வார் அருளிச்செய்த முதல் திருவந்தாதியின் முதல் பாட்டு.

" வையம் தகளியா வார் கடலே நெய்யாக-
வெய்ய கதிரோன் விளக்காகச்-செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினன் சொன் மாலை-
இடராழி நீங்கவே யென்று."

(இதன் பொருள்) வையம்-பூமி, தகளியா - அகலாகவும், வார்கடலே-நீண்டகடலே, நெய்யாக - நெய்யாகவும், வெய்ய கதிரோன்-மிகவும் வெப்பம் பொருந்திய ஸூர்யனே, விளக்காக - விளக்காகவும், செய்ய-சிவந்த, சுடர் ஆழியான்-மிகவும் ப்ரகாசத்துடன் கூடின சக்ராயுதத்தை உடையவனுகிய, திருமாலினது - விஷ்ணுவினது, அடிக்கு (ஏ)- திருவடிகளுக்கே, இடர் ஆழி-துன்பமாகியகடலிலிருந்து, நீங்க என்று-நீங்குதற்கென்று, சொல்மாலை-சொல்லாலாகிய இந்த முதல் திருவந்தாதி மாலையை, சூட்டினேன் - செய்தேன்.

அதாவது, பூமி அகலமாகவும், கடல் நெய்யாக

வும், ஸூர்யன் விளக்காகவும், ப்ரகாசமுள்ள சக்ராயுதத்தை உடைய விஷ்ணுபகவானுடைய திருவடிகளுக்கு இந்த முதல் திருவந்தாதியாகிய சொல் மாலையைச் சூட்டினேன். எதற்காகவென்றால், துன்பமாகிய கடலிலிருந்து நீங்குவதற்காக.—என்றவாறு.

இந்தப்பாட்டை ஆதியாய்க் கொண்டு நூறு பாட்டுகளைப்பாடி, கடைசியாய் திருவிக்ரமமூர்த்தியின் பெருமையை பின் வரும் கடைசிப்பாட்டால் பாடி. திருவந்தாதியை முடிவுசெய்தார்.

> " ஓரடியுஞ் சாடுதைத்த வொண்மலர்ச் சேவடியும்-
> ஈரடியுங் காணலாமென்னெஞ்சே !—ஓரடியின்
> தாயவனைக் கேசவனைத் தண்டுழாய் மாலைசோ-
> மாயவனையேமனத்து வை.''

(இதன் பொருள்) ஓரடியும் - விஷ்ணுவின் ஒரு திருவடியும், சாடுதைத்த - தூக்கிவைத்த, ஒள் - ஒளியுடன் விளங்குகிற, மலர்ச்சேவடியும், தாமரைப் பூப்போல விளங்கும் சிவப்பு நிறமுள்ள திருவடியும், ஈரடியும் - ஆகிய இந்த இரண்டு திருவடிகளையும், என்னெஞ்சே-என்னுடைய மனமே, காணலாம்-பார்க்கலாம். ஓரடியின் - ஓர் திருவடியினால், தாயவனை- உலகமெல்லாவற்றையும் அளந்தவனை, கேசவனை- விஷ்ணுவை, தண்டுழாய் மாலை - குளிர்ச்சியுடன் கூடின துளஸி மாலையை, சேர்—அணிந்துகொண்டிருக்கிற, மாயவனையே - மாயையில் வல்லவனான விஷ்ணுவையே, மனத்துவை-நீ உன் மனத்தில்வை. (அந்த திருவடிகளைக் குறித்தே எப்பொழுதும் த்யானம் செய்.)

அதாவது, என் மனமே, விஷ்ணுவின் ஒரு திருவடியும், தூக்கிவைத்த தாமரைப் பூப்போன்ற ப்ரகாசமுள்ள இன்னொரு திருவடியையும் நீ காணலாம். உலகமெல்லாம், அளந்தவனும், கேசவனும் ஆகிய, துளஸிமாலையை உடைய மாயவனையே நீ மனஸில் வைத்திரு.—என்றவாறு.

பூதத்தாழ்வார் அருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதியின் முதல் பாட்டு.

“ அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக-
இன்புருகு சிந்தையிடுதிரியா—நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு-
ஞானத் தமிழ்புரிந்த நான்.”

(இதன் பொருள்) ஞானத்தமிழ் - ஞானமாகிய தமிழை, புரிந்த-விரும்பிய, நான்-அடியேன், அன்பே-அன்புதானே, தகளியாக - அகலாகவும், ஆர்வமே-ஆசையே, நெய்யாக-நெய்யாகவும், இன்பு உருகு-ஸுகத்தினால் உருகுகின்ற, சிந்தை - மனமே, இடுதிரியா-போடப்பட்ட திரியாகவும், நன்பு - விசேஷலக்ஷணத்துடன்கூடின ஆத்ம வஸதுவானது, உருகி-உருகி, ஞானம் - ஞானமாகிய, சுடர்விளக்கு - சுடருடன் கூடின விளக்கை, நாரணற்கு - நாராயணன் பொருட்டு ஏற்றினேன் - ஏற்றி வைத்தேன்.

அதாவது, ஞானமாகிய தமிழை விரும்பிய நான், அன்பு அகலாகவும், ஆசை நெய்யாகவும், இன்பத்தால் உருகுகின்ற மனமே திரியாகவும் ஆத்மவஸ்து உருகி ஞானமாகிய சுடர்விளக்கை நாராயணன் பொருட்டு நான் ஏற்றிவைத்தேன்.—என்றவாறு.

இப்படி ஆரம்பித்து நூறு பாட்டுக்களைப்பாடி, கடைசியாய் ஈச்வர பக்தி மிகவும் அதிகமாய்ப் போன தினால் கடைசிப் பாட்டில் பகவான் பெயர்களையே சொல்லி முடித்தார்.

"மாலே! நெடியோனே! கண்ணனே!—விண்ணவர்க்கு
மேலா! வியன் துழாய்க் கண்ணியனே!—மேலாய்
விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே!—என்ற
னளவன்றால் யானுடைய அன்பு."

(இதன் பொருள்.) மாலே! - எல்லாருக்கும் பெரியவனான விஷ்ணுவே! நெடியோனே! - உலகத்தையெல்லாம் ஒரு அடியாய் அளந்த மேன்மை பொருந்திய திருவடிகளுடன் கூடினவனே! கண்ணே! - நீலமேக ச்யாமள நிறத்துடன் கூடின க்ருஷ்ணபகவானே!, விண்ணவர்க்கு மேலா! - ஆகாச வாஸிகளான தேவர்களுக்கெல்லாம் மேலானவனே! வியன் - பெரிய, துழாய்க் கண்ணியனே! - துளஸி மாலையை திருமேனியில் அணிந்தவனே!, மேலாய் - மிகவும் சிறப்புடனே, விளவின்காய்-விளாங் காய்களை, கன்றினால் - ஒரு கன்றுக் குட்டியினால், வீழ்த்தவனே- கீழே விழும்படி செய்தவனே. யானுடைய அன்பு - என்னுடைய அன்பானது, என்றனளவன்று (ஆல்)- என்னுடைய அளவிலே அடங்கியதில்லை.

அதாவது, விஷ்ணுவே, நெடியவனே, க்ருஷ்ண பகவானே, தேவர்களுக்கும் மேலானவனே, பெரிய துளஸிமாலையை தரித்தவனே, மிகவும் சிறப்புடனே விளாங்காய்களை ஒரு கன்றினால் விழச்செய்தவனே,

என்னுடைய அன்பானது என்னுடைய அளவிலே அடங்கியதில்லை.—என்றவாறு.

விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே என்றது, க்ருஷ்ணன் கோகுலத்தில் இருந்தபோது வத்ஸாஸுரன் என்னும் அஸுரன் க்ருஷ்ணனையும், பலராமனையும் கொல்ல எண்ணங்கொண்டு கன்றுக்குட்டி வேஷம் பூண்டு மற்ற கன்றுகளோடு சேர்ந்திருந்தான். இதை அறிந்த க்ருஷ்ணன் மெதுவாக அதனிடம் போய் அதைப்பிடித்துத் தூக்கி கல்லைவிட்டெறிவதுபோல் ஸமீபத்திலிருந்த விளாந்தோப்பில் எறிந்தார். கன்றுக்குட்டி விளாமரத்தில் தாக்கி, காய்களை உதிர்த்தது.

பேயாழ்வார் பாடின மூன்றாந் திருவந்தாதியின் முதல் பாட்டு அவர் எப்பேர்ப்பட்டவரென்பதையும், அவருடைய ஈச்வர பக்தியையும் நன்கு விளக்கிக்காட்டும்.

" திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்—திகழும்
அருக்கனணி நிறமுங்கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழிகண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்—
என்னாழி வண்ணன்பா லின்று."

(இதன்பொருள்.) இன்று-இன்றையதினம், என் ஆழி வண்ணன் பால்-கடல் நிறம் அமைந்த என் பரமாத்வான விஷ்ணுவிடத்தில், திருக்கண்டேன்-மேன்மை பொருந்திய லக்ஷ்மிதேவியைக்கண்டேன், பொன் மேனி கண்டேன் - தங்கம்போன்ற அழகிய மேனியையும் தர்சனம் செய்தேன், திகழும் - ப்ரகா

சிக்கின்ற, அருக்கன் - ஸூர்யனுடைய, அணி நிறமுங் கண்டேன் - அழகிய நிறத்தையும் கண்டேன் ; செரு- யுத்தத்தில், கிளரும் - கிளர்ச்சியுடன் விளங்குகிற, பொன்னாழி - அழகிய சக்ராயுதத்தையும், புரிசங்கங் கை கண்டேன் - வலம்புரி சங்கத்தையும் தர்சித்தேன்.

அதாவது, இன்றையதினம், கடல் நிறமுள்ள எனது பரமாத்மாவான விஷ்ணுவினிடத்தில், லக்ஷ்மி தேவியைக் கண்டேன், பொன் போன்ற மேனியைக் கண்டேன், ப்ரகாசமுள்ள ஸூர்யனுடைய அழகிய நிறத்தையுங் கண்டேன், யுத்தத்தில் கிளர்ச்சியுடன் விளங்குகிற அழகிய சக்ராயுதத்தையும், வலம்புரி சங்கத்தையுங் கண்டேன்.—என்றவாறு.

முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் சில காலமிருந்து, அங்கே உள்ளவர்களை ஈச்வரபக்தி பண்ணும்படி செய்துவிட்டு, அவரவர்கள் வேவ்வேருகப் போனார்கள். வெகு இடங்களுக்குச் சென்று, வைஷ்ணவ மதத்தைப் பரவச்செய்தார்கள். கடைசியாய், மறுபடியும் அந்த திருக்கோவிலூருக்கே வந்தார்கள். மூவரும் மறுபடியும் ஒன்று கூடினார்கள். இவர்கள் பின்னால் சொல்லப்போகும் திருமழிசை ஆழ்வாரையும் கண்டு, அவருடன் சில காலத்தைக் கழித்துவந்தார்கள். கடைசியாய் இவர் மூவருமாய் அங்கிருந்து வேறு லோகம் போனார்கள்.

இவர்கள் ஒவ்வொருவரும் அவரவர்கள் தவத்தின் பலத்தால், 3325 வர்ஷகாலம் இந்த பூமியில்

வஸித்தார்கள். பின் கூறியிருக்கும் பாசுரத்தால் முதலாழ்வார்கள் கீர்த்தி நன்ருய் விளங்கும்.

"மற்றுமுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த-பெற்றிமையோ
ரென்று முதலாழ்வார்களென்றும் பெயரிவர்க்கு
நின்றதுலகத்தே நிகழ்ந்து.''

(இதன்பொருள்.) மற்றுமுள்ள - மற்ற, ஆழ்வார்களுக்கு-ஆழ்வார் முதலிய வைஷ்ணவ பக்தர்களுக்கு, முன்னே-முன்பாக, வந்துதித்து-இந்த பூலோகத்தில் அவதாரஞ்செய்து, நன்தமிழால் - நலம்பொருந்திய தமிழ்ப் பாட்டுக்களினுல், நூல் செய்து - முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்ரும் திருவந்தாதி என்கிற மூன்று திவ்ய நூல்களைச் செய்து, நாட்டை - இந்தப் புண்ய பூமியை, உய்த்த-உஜ்ஜீவிக்கும்படி செய்வித்த, இவர்க்கு-இந்த மூன்று ஆழ்வார்களுக்கும், பெயர் - பெயரானது, பெற்றிமையோரென்றும் - பெருமை பொருந்திய தேவர்களென்றும், முதலாழ்வார்களென்றும் - முதலாழ்வார்களென்றும், உலகத்தே - இந்த உலகத்தில், நிகழ்ந்து நின்றது - எக்காலமும் நிலைபெற்று நின்றது.

அதாவது, மற்ற ஆழ்வார்களுக்கு முன் அவதரித்து, தமிழில் நூல் செய்து, இந்த புண்ய பூமியை உஜ்ஜீவிக்கும்படி செய்த இந்த மூன்று ஆழ்வார்களுக்கும் பெருமை பொருந்திய தேவர்களென்றும், முதலாழ்வார்கள் என்றும் பெயர்கள் உலகத்தில் எக்காலத்திலும் நிலைபெற்று நின்றது.—என்றவாறு.

### முதலாழ்வார்களின் காலம்.

பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், ஆகிய மூவரும் ஒரு ஸமயத்தில் வஸித்தவர்கள். பூதத்தாழ்வார் மஹாபலி புரத்தின் பெருமையைக் குறித்துப் பாடி யிருக்கிறார். பல்லவ அரசனுன மஹாமல்லன் என்ற முதலாவது நரஸிம்மவர்மன் காலத்தில் தான் மஹாபலிபுரம் ஏற்படுத்தபட்டதென்றும், அதற்கு முன் இந்த ஊரே யிருந்ததில்லை யென்றும் சரித்ரம் எழுதுகிறவர்கள் தெரிவிக்கிறார்கள். இந்த அரசன் கி. பி. (கிறிஸ்து பிறந்து) ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் வஸித்தான். ஆனதினுல் முதலாழ்வார்கள் கி. பி. ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் வஸித்ததாகக் கொள்ளவேண்டும்.

---

## VI. திருமழிசை ஆழ்வார்.

இந்த ஆழ்வார் பூவிருந்தவல்லிக்கு ஸுமார் மூன்றுமைல் தெற்கேயுள்ள திருமழிசை யென்ற ஊரில் த்வாபரயுகத்தில் 8,62,901-வதான ஸித்தார்த்தி வர்ஷம், தைமாஸம், க்ருஷ்ணபக்ஷம், ப்ரதமை திதி, ஞாயிற்றுக்கிழமை, மகா நக்ஷத்ரம் துலாலக்னம் கூடின தினத்தில் அவதரித்தார். இவர் தந்தையார் பெயர் பார்க்கவர். தாயார் பெயர் கனகாவதி.

### அவதாரத்தின் விசேஷம்.

இந்த லோகத்தில் உண்டான விஷயங்களில் அதிகப் பற்றில்லாமல், ஈச்வரனைக் குறித்து தவம் செய்பவர்களுக்கு ரிஷிகள் என்று பெயர். அதில் தவம் அதிகரித்துப்போய் தங்களுடைய தவத்தின் மேன்மையினால் ஈச்வரனுடைய வடிவத்தை பார்க்கும்படியாய் ஏற்படும் சக்தி சில ரிஷிகளுக்கு வருவதுண்டு. அப்படிப்பட்ட தவத்தைச் செய்து, ஈச்வரஞானத்தைப் பெற்றவர்களுக்கு ப்ரும்ம ரிஷிகளென்று பெயர். இந்த ப்ரம்ம ரிஷிகளில் முக்யமானவர்கள் அத்ரி, வஸிஷ்டர், ப்ருகு, பார்க்கவர், புலஸ்தியர், அங்கிரஸ், முதலியவர்கள். இப்பேர்ப்பட்ட மஹரிஷிகள் ஒரு ஸமயத்தில் ஒன்று சேரும்படியாய் நேரிட்டது. அவர்களுக்குள் பூலோகத்தில் உண்டான இடங்களில் மிகவும் கீர்த்திபெற்றதும், தவம் செய்வதற்கு தகுந்

ததுமான இடம் எது, என்பதாய் ஸந்தேகம் ஏற்பட்டது. ஒருவருக்கும் சரியான இடத்தைச் சொல்லத் தெரியவில்லை. கடைசியாய் அந்த ப்ரம்மரிஷிகள் எல்லாரும் ஒன்று சேர்ந்து ப்ரும்மாவினிடம் சென்று "இந்த ஜன்மாக்கள் கறையேறி, மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியதான தபஸ் ஒன்றை செய்ய ஆவலுள்ளவர்களா யிருக்கிறோம்! அதற்கு ஏற்ற இடம் பூலோகத்தில் எதுவென்று தெரியவில்லை. தாங்கள் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்" என்றார்கள். அதைக் கேட்ட ப்ரும்ம தேவர், இவர்களுக்கு தம் வாயால் பதில் சொல்லி விட்டால் அவ்வளவு நம்பிக்கை ஏற்படாதென்றும், அதைக் காட்டிலும் ஒருவிதமான கார்யத்தை அவர்கள் முன்பே செய்து காட்டினால், அவர்களுக்கு அதில் நம்பிக்கை நன்றாய் ஏற்படுமென்றும் எண்ணங்கொண்டார். உடனே தேவலோகத்திலுள்ள சிற்பிகளுள் மிகவும் ஸாமர்த்ய சாலியான விச்வகர்மாவை வரவழைத்தார். அந்த ரிஷிகளை யெல்லாம் முன்னால் நிறுத்திக்கொண்டு, சிற்பிக்கு பின்வருமாறு உத்தரவு அளித்தார். "இவர்கள் கண் பார்வையில் ஒரு பெரிய தராசைக்கொண்டு வந்து, அதில் ஒரு தட்டில் பூலோக முழுவதையும், மற்றொரு தட்டில்திருமழிசை யென்று கீர்த்திபெற்ற புண்ய ஸ்தலத்தையும் வைத்து நிறு." அப்படியே தேவ சிற்பி செய்ய, பூலோகத்தை வைத்த தட்டு மேல் நோக்கிச் சென்றது. திருமழிசையுடன் கூடின தட்டு பாரத்தால் தாழ்ந்தது. இதைக் கண்ட ரிஷிகள்

மிகவும் ஸந்தோஷத்துடன் ப்ரும்மாவை வணங்கி விட்டு, அவரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு, திரு மழிசைக்குப்போய் தவம் செய்யத் தொடங்கினார்கள். திருமழிசை யென்ற இடத்திற்கு இந்தக் காரணத் தைப்பற்றி "மஹீஸார க்ஷேத்ரம்", அதாவது, பூலோகத்தில் உயர்ந்த ஊர் என்று பெயர் உண்டா யிற்று. பார்க்கவர் ஈச்வர ஞானத்தை யடையவேண்டி அவரைக்குறித்து மிகவும் கொடுமையான தவத்தைச் செய்யத் தொடங்கிவிட்டார். அந்தத் தவத்தினால் விஷ்ணுபகவான் அவருக்கு நேராக தர்சனம் கொடுத் தார். ஈச்வர வடிவத்தைக்கண்ட ரிஷிக்கு உண்டான ஆனந்தம் சொல்லிமுடியாது. அத்துடன் தவத்தை நிறுத்திவிடாமல், மறுபடியும் முன்னிலும் அதிகமாய் தீர்க்க ஸத்ரம் என்ற தவத்தைச் செய்யத் தொடங் கினார். அதைக்கண்ட தேவர்கள், என்ன நடக்குமோ தெரியவில்லையே யென்று பயந்தார்கள். சிலருக்கு பொறாமை யுண்டாயிற்று. அவருடைய தவத்தை எப்படியாவது அழிக்க வேண்டுமென்றும், இல்லாத விஷயத்தில் தேவர்களுக்கு ஏதாவது அபாயம் வரும் என்றும் எண்ணி, தேவலோகத்து ஸ்திரீகளான ஊர்வசி, திலோத்தமை, மேனகை, ரம்பை முதலிய அப்ஸர ஸ்த்ரீகளை பூலோகத்துக்கு அனுப்பினார்கள். அந்த ஸ்த்ரீகளுக்கு தவம் செய்யும் முனிவர்களின் தபோ பலத்தைக் குறைப்பதே வழக்கம். அவர்கள் தங்களால் ஆனமட்டிலும் அந்த முனிவர் தபஸை அழிக்க முயன்றும், ஒன்றும் ப்ரயோஜனப்படவில்லை.

கடைசியில் வெட்கப்பட்டவர்களாய் தங்கள் இருப்பிடம் போனார்கள். இந்த அவமானத்தை தங்களை தூது அனுப்பின தேவர்களிடம் தெரிவிக்க, அவர்களுக்கு அளவற்ற சோபம் உண்டாய், உடனே அந்த முனிவருடைய தபஸை எப்படியாவது அழித்தே தீரவேண்டுமென்று எண்ணங்கொண்டு, கனகாங்கி யென்றும், கனகாவதி யென்றும், பெயர்பெற்ற அப்ஸரஸை அனுப்பினார்கள். அவள், தான் வருவதற்கு முன் தென்றல் காற்றையும், வஸந்த காலத்தையும் உண்டாக்கிக் கொண்டாள். மிகவும் குயில்போன்ற குரலோடு அவர் முன் வந்து பாடினாள். விதிவசத்தால் அந்த மஹரிஷி அவளுடைய வலையில் சிக்கிக் கொண்டார். பகவானுடைய ஞாபகம் குறைந்தது அவளுடைய ஞாபகம் அதிகரித்தது. யோகம் போயிற்று. கடைசியாய் கனகாவதி கர்ப்பிணியாய் விட்டாள். பன்னிரண்டு மாஸம் கர்ப்பிணியாயிருந்து முன் சொன்னபடி திருமழிசையாழ்வாரைப் பெற்றாள். இவர் விஷ்ணுவினுடைய திருச்சக்ரத்தின் அம்சம். இதற்கு ஸுதர்சனமென்றும், திருவாழி யென்றும் வேறு பெயர்கள் உண்டு. இந்த ஆழ்வார், மற்றக் குழந்தைகளைப்போல், கை, கால், காது, நாக்கு, மூக்கு, கண், தலைமுதலிய அவயவங்களுடன் பிறக்காமல், ஒரே உண்டையாய்ப் பிறந்தார். இதைக் கண்ட தாய் தந்தைகளுக்கு துக்கம் மிகவும் அதிசமாய் உண்டாயிற்று. பக்கத்திலிருந்த ஒரு பிரம்புப் புதரின் மத்தியிலே அந்த உண்டையை எறிந்து விட்டார்கள்

வந்த கார்யத்தை நிறைவேற்றி விட்டபடியால், கனகாங்கி தேவலோகம் போனுள். தேவர்களும் ஸந்தோஷப்பட்டார்கள். பார்க்கவ மஹரிஷி தன்னுடைய நிலைமையை அறிந்து மிகவும் வருத்தப்பட்டார். கடைசியாய் அந்த இடத்தில் வெறுப்புக் கொண்டு அதை விட்டு வேறே இடத்திற்குப் போய் தவம் செய்யலானுர். பிரம்புப் புதரில் எறியப்பட்ட பிண்டமானது ஈச்வர கருணையால் சீக்ரத்தில் அவயவங்களுடன் கூடினதாயிற்று. சீக்ரம் ஜீவனை அடைந்து சிறு குழந்தையாயிற்று. பசி, தாகம் அதிகரித்தது. முலைப்பால் கொடுத்து வளர்க்க தாய் இல்லை. இவர் பிறந்த தினமே, தாயைப் பிரிந்த குழந்தையானுர். அழுகை மிகவும் அதிகரித்தது. இதைத் தீர்க்க வேண்டுமென்று எண்ணங்கொண்ட ஈச்வரன் தம்முடைய மனைவிமார்களுடன் அங்கே வந்து, அந்தக் குழந்தையைக் கருணையுடன் பார்த்து, தன்னுடைய ரூபத்தை அந்தக் குழந்தைக்குக் காட்டி அதை ஸந்தோஷப்படும்படி செய்துவிட்டு மறைந்தார். திருமழிசையில் ஸ்வாமியின் பெயர் ஜகந்நாதப் பெருமாள். அவரே அந்தப் பிரம்புப் புதருக்குப் போனதாக ஒரு ஐதீகம் இருக்கிறது. அவர்கள் போனதும் குழந்தைக்கு அழுகை முன்னிலும் அதிகரித்தது. ஓயாமல் அழத் தொடங்கிற்று.

## இளமைப் பருவம்.

அந்தப் பிரம்புப் புதருக்கு ஸமீபத்தில் குயவர்கள், பானை, சட்டி முதலிய மண் பாத்ரங்கள் செய்ய

மண் எடுக்க அடிக்கடி போவது வழக்கம். அதே மாதிரியாக மண் எடுக்கவோ, அல்லது விறகுக்காகவோ, திருவாளனென்று பெயருடைய ஒரு வேளாளன் (வேளாளனென்பது குயவர்களுக்குப் பெயர்) அங்கு போனன். அழுகைக் குரலைக் கேட்டதும் அவனுக்கு மனஸில் பயம் உண்டாயிற்று. சற்று திடுக்கிட்டான். உற்றுக் கேட்க ஒரு சிறு குழந்தையின் அழுகைக் குரல் என்று தெரியவந்தது. உடனே தன்னுடன் கூடவந்தவர்களுடன் போய்ப் பார்த்தான். குழந்தையைக் கண்டதும் அவனுக்கு ஸந்தோஷம் மிகவும் அதிகப்பட்டது. பக்கத்திலெல்லாம் பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. "இந்தக் குழந்தை இங்கே வந்த காரணம் தெரியவில்லை. நாமே இந்தக் குழந்தையை நம்முடைய குழந்தை மாதிரி வளர்ப்போம்" என்று ஆனந்தப்பட்டு அதைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குப்போய், தன் மனைவியான பங்கஜச்செல்வியை அழைத்து, நடந்த ஸமாசாரத்தைத் தெரிவித்தான். அவளும் ஸந்தோஷத்துடன் அந்தக் குழந்தையை கையில் வாங்கி உச்சி முகர்ந்து பார்த்து, சீராட்டிக்கொண்டு வந்தாள். ஈச்வரன் கருணையால் அவளுக்கு முலைப்பால் உண்டாயிற்று. அப்படியிருந்துங்கூட அந்தக் குழந்தை முலைப்பாலில் ஆசை கொள்ளவில்லை. அழுவதே கிடையாது. பசி கிடையாது. தாகம் கிடையாது. மல மூத்ரம் ஒன்றும் கிடையாது. உடம்பு வாடவில்லை. நாளுக்கு நாள் திருமேனி மிகவும் நன்றாய் வளரத் தொடங்கிற்று.

ஆனால் அடிக்கடி ஈச்வர குணங்களில் ஈடுபட்டவர்களைப்போல் சிரிப்பது மட்டிலும் வழக்கமாயிருந்தது.

இந்த ஆழ்வாரின் செய்தி ஊரெல்லாம் பரவிற்று. இந்த ஆச்சர்யமான குழந்தையை பார்க்க அநேக ஜனங்கள் வந்தார்கள். அந்த ஊரில் ஒரு வயது சென்ற வேளாள னொருவனுண்டு. அவன் அதைக் கேட்டதும், தன்னுடைய மனைவியுடன் அந்தக் குழந்தையைப் பார்க்கப்போனான். அவன் பெரிய கிழவன். நன்றாய் படித்தவன். ப்ராம்மணரிடத்தில் விச்வாஸமுள்ளவன். ஈச்வரபக்தி அதிகம். குழந்தையைப் பார்க்கப்போகிறவர்கள் கையில் ஏதாவது எடுத்துக் கொண்டு தான் செல்ல வேண்டுமென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன என்பதை அறிந்து, ஒரு செம்பில் கொஞ்சம் காய்ச்சின பசும் பாலை எடுத்துக் கொண்டு போனான்.

தெய்வீகப் பிறவியுடன் கூடின குழந்தையைப் பார்த்ததும் அவனுக்கு அளவற்ற ஸந்தோஷம் உண்டாயிற்று. சடைசியாய் அந்தக் குழந்தையைக் கையினால் கட்டி அணைத்து முத்தமிட்டு, மிகவும் ப்ரீதியுடன் தான் கொண்டுவந்த பாலை குழந்தைக்குக் கொடுத்தான். கிழவனுடைய பக்தியையும், ப்ரீதியையும் நன்றாய் அறிந்த ஆழ்வார் அந்தப் பாலை எல்லாரும் பார்க்கக் குடித்தார். அதைக் கண்ட வேளாளனுக்கும் அவன் மனைவிக்கும் உண்டான ஸந்தோஷம் சொல்லி முடியாது. கிழவனும் அவர் மனைவியும் தினந்தோறும் அப்படியே வந்து பால் கொடுத்து விட்டுப்

போனார்கள். அவர்கள் குறையை அறிந்த ஆழ்வார், ஒரு நாள் தான் குடித்த பிற்பாடு உள்ள மீதப் பாலை அவர்களைக் குடிக்கும்படி கொடுத்தார். அவர்கள் அதைக் குடிக்க, அந்த ஸ்திரீக்கு இளமைப் பருவம் தோன்றி கர்ப்பவதியானாள். கொஞ்ச நாள்களுக்கெல்லாம் ஒரு புருஷக் குழந்தை பிறந்தது. "கணி கண்ணன்" என்று அந்தக் குழந்தைக்கு வேளாளன் பெயரிட்டான். அந்தக் குழந்தையை அதன் தாய் தந்தையர்கள் இவ்வாழ்வார் முன்னிலையில் கொண்டு வந்து விடவே, ஆழ்வார் குழந்தையைப் பார்த்து ஸந்தோஷப்பட்டார். அந்தக் குழந்தையும் நன்றாய் வளர்ந்துவந்தது. பல கலைகளையும் அறிந்துவந்தது. நல்ல ஒழுக்கமுள்ளதாயிற்று. ஈச்வர பக்தியுடன் கூடியதாயிற்று.

### பால்ய சேஷ்டைகள்.

இந்த ஆழ்வார் ஏழு வயஸு வரையில் அந்த வேளாளன் வீட்டில் வளர்ந்து வந்தார். கடைசியாய் எட்டாவது வயஸு வந்ததும் அஷ்டாங்கயோகம் (எட்டு அங்கயோகம் என்பது பொருள்) செய்ய வேண்டுமென்று எண்ணி, இந்த உலகத்திற்கு ஆதிக் கடவுள் யார் என்று அறிய எண்ணங்கொண்டார். முதல் முதல் பௌத்த மதத்தில் சேர்ந்து அந்த மதத்திற்கு உரிய நூல்களைப் படித்து, அதில் ஸமர்த்தர்களைக் கண்டு பேசி, அவர்களுடன்கூடி வாழ்நாட்களைக் கழித்து வந்தார். பின்பு, அதில் ஒரு ஸ்திரமான நம்பிக்கை கொள்ளாமல், சமண மதத்தில் சேர்ந்து

அங்கும் இப்படியே செய்துவந்தார். அதிலும் மன ஸுக்கு ஸமாதானம் ஏற்படவில்லை. கடைசியாய் மாயாவாதத்தில் புத்தியைச் செலுத்தினர்.

இப்படியாக இவர் ஸுமார் 400 வர்ஷங்களைக் கழித்து வந்தார். சைவ மதத்தைப் பற்றியிருந்த ஸமயத்தில் இவருக்கு சிவ வாக்யரென்று பெயர் உண் டாயிருந்தது. சைவ விஷயமாக சில நூல்களை அப் பொழுது செய்தார். அப்பொழுது சிவபக்தி மேலிட் டவராய்க் காலம் கழித்துவந்தார். அதிலும் மன ஸுக்கு நல்ல நம்பிக்கை ஏற்படவில்லை. என்ன செப் வதென்று விசாரப்பட்டுக்கொண்டிருந்தார்.

---

## VII. திருமழிசை ஆழ்வார் வைஷ்ணவரானது.

திருமழிசை யாழ்வாருடைய வரலாற்றைக் கேட்ட பேயாழ்வார் இவரைத் திருத்தி நல்ல வழிக்குக் கொண்டுவர எண்ணி இவர் இருக்கும் இடத்திற்குப் போனார்.

இந்த ஆழ்வார் இருந்த இடத்திற்கு ஸமீபத்தில் தன் இருப்பிடத்தை ஏற்படுத்திக்கொண்டார். தன்னுடைய இருப்பிடத்திற்கு வெளியில் சில செடிகளை தலைகீழாகப் பிடுங்கி நட்டார். அடியில்லாத குடத்தையும், அறுந்துபோன கயிற்றையும் கொண்டு கிணற்றிலிருந்து அந்தச் செடிகளுக்கு நீர் வார்க்கத் தொடங்கினார். இதைக் கண்ட ஜனங்கள் ஆச்சர்யப்பட்டார்கள். திருமழிசை யாழ்வாரும் அங்கே போய் பேயாழ்வார் செய்திருந்த விநோதங்களைப் பார்த்து, சிரிப்பு அடங்காமல் சிறித்ததுமல்லாமல், பேயாழ்வாரைப்பார்த்து, "நீர் பைத்யம் பிடித்தவரா?" என்று கோபத்துடன் கேட்டார். அதற்கு பேயாழ்வார் "நான் பைத்யம் பிடித்தவனில்லை, நீரே பைத்யம் கொண்டவர்" என்று பதில் சொன்னார். சிவபக்தரான திருமழிசை யாழ்வார் பேயாழ்வார் செய்த பொருந்தாத கார்யத்தை அவர் பைத்யம் பிடித்தவரென்பதற்கு ஸாக்ஷியாக எடுத்துச் சொன்னார். பக்தி

மேலிட்டவரான பேயாழ்வார் "பல மதங்களை விசாரித்து ஒரு மதத்திலும் புத்தியை நன்றாய்ச் செலுத்தாமல், ஈச்வரனுடைய வல்லமையை இன்னதென்று அறியாமல், வாழ்நாட்களை கழிப்பவர் பைத்யம் பிடித்தவரா, அல்லது வேறே யாராவது பைத்யம் பிடித்தவரா? சொல்லும்" என்று கோபத்துடன் கேட்டார். உடனே இருவருக்கும் சைவ வைஷ்ணவ மதச் சண்டை மிகவும் பெரியதாய் உண்டாயிற்று. ஒவ்வொருவரும் அவரவருடைய மதத்தைப்பற்றிப் பேசினார்கள். கடைசியாய் சிவபக்தரான திருமழிசையாழ்வார் விஷ்ணுபக்தியே நல்லதென்று ஒத்துக்கொண்டு தாமும் அது முதல் வைஷ்ணவரானார். மேலும் அன்று முதல் அவருடைய முக்ய சிஷ்யராகி அவரையே சரணமாக அடைந்தார். அவ்வாழ்வாரும் இவருக்கு பஞ்ச ஸம்ஸ்காரம் செய்தார். அதோடு இவருக்கு வைஷ்ணவ மதத்தின் கொள்கைகளை நன்றாய்க் கற்பித்தார். திருமழிசையாழ்வார் தாம் இதற்கு முன்னிருந்ததையும் இப்பொழுது இருக்கும் அவஸ்தையையும் பின்வரும் பாசுரத்தால் பாடியிருக்கிறார்.

"சாக்கியங் கற்றோம் சமணம் கற்றோம் சங்கரனார்
ஆக்கிய வாகமநூலா ராய்ந்தோம்—பாக்கியத்தால்
செங்கட் கரியானைச் சேர்ந்தோம் யாந்தீதிலமே
யெங்கட் கரியதொன்றில்."

[பதவுரை.] சாக்கியங் கற்றோம்-சாக்கிய மதத்தை நன்றாய் அறிந்தோம், சமணம் கற்றோம் - சமணமதத்தையும் நன்றாய் அறிந்தோம், சங்கரனார் - சிவபெரு

மான், ஆக்கிய - மிகவும் கிருபையுடன் செய்த, ஆகம நூல் - ஆகமநூலை, ஆராய்ந்தோம் - ஆராய்ந்து பார்த்தோம், பாக்கியத்தால் - ஏதோ பாக்யத்தின் காரணமாய் - செங்கட்கரியானை - சிகப்பு நிறமான கண்களுடன் கூடினவனும், நீலமேக ச்யாமள நிறத்துடன் கூடினவனுமான விஷ்ணுவை, சேர்ந்தோம் - (விஷ்ணுவின் க்ருபைக்கு பாத்ரமாக) அடைந்தோம். யாந்தீதிலமே - இனி நமக்கு கெடுதல் என்பதே உண்டாக மாட்டாது. எங்கட்கரிய தொன்றில் - எங்களுக்கு இனி அருமையானது ஒன்றுமில்லை.

[பொழிப்புரை] சாக்கிய மதத்தை நன்றாய் அறிந்தோம். சமண மதத்தையும் நன்றாய் அறிந்தோம். ஸாக்ஷாத் சிவபெருமானால் மிகவும் க்ருபையுடன் செய்யப்பட்ட ஆகம நூல்களையும் நன்றாய் ஆராய்ந்து பார்த்தோம். ஒன்றிலும் மனஸுக்கு ஒருவிதமான நிச்சயபுத்தியும், தீர்மானமும் ஏற்படவில்லை. ஏதோ பாக்யத்தின் காரணமாய் விஷ்ணுவின் தாஸராக ஆகிவிட்டோம். இனிமேல் நமக்கு யாதொரு குறைவுமில்லை என்பதற்கு ஸந்தேகமே கிடையாது.

சிவபெருமான் ப்ரத்யக்ஷமானது.

இப்படி நாராயணனைக் குறித்து தவம் செய்து கொண்டிருந்த இவரை ஒரு ஸமயம் ஆகாச மார்க்கமாய்ப் போய்க்கொண்டிருந்த பார்வதீ பரமேச்வரர்கள் கண்டார்கள். ஈச்வரன் இவரைப் பார்த்தும் பாராததுபோல் போகலானார். பார்வதிதேவி இவ

ருடைய தபஸைக்கண்டு இவருக்கு நம்மாலானமட்டி லும் ஒத்தாசை அவச்யம் செய்யவேண்டுமென்ற எண் ணத்துடன், தனது நாயகனைப்பார்த்து "இப்படி தபஸ் செய்யும் புருஷன் யார்" என்று கேட்டாள். அதற்கு சங்கரர் "இவர் இதுவரையில் நமக்கு அடி மையாய் பக்தி செய்துவந்தார். இப்பொழுது நம்மை விட்டு விலகி விஷ்ணுவுக்கு அடிமையாகி அவருடைய பக்தியில் ஈடுபட்டிருக்கிறார்" என்று சொன்னார். பார்வதீ தேவி இவரிடத்தில் தயவு அதிகப்பட்டவ ளாய் "நாம் இவருக்கு ஏதாவது வரங்களை கொடுத்து விட்டுப் போகவேண்டுமென்று கணவனுக்குத் தெரி வித்தாள். இருவரும் ஆழ்வார் எதிரில் வந்து தாங்க ளாகவே தர்சனம் கொடுத்தார்கள். ஆழ்வார் அந்த ஸமயத்தில் விஷ்ணுவைக்குறித்து நினைத்துக்கொண்டு ஒரு கந்தல் வேஷ்டியைத் தைத்துக்கொண்டிருந் தார். பார்வதி பரமேச்வரர்கள் மிகவும் கருணையுடன் ஆழ்வார் முன்னே வந்தும் அவர் இவர்களை கவனி யாமலிருந்துவிட்டார். இதைக்கண்ட சிவபெருமான் அந்த ஆழ்வாரைப்பார்த்து "உமக்கு ஏதாவது வரம் கொடுக்க வந்திருக்கும் எங்களை அனாதரவு செய்வது உமக்கு ந்யாயமா" என்றார். இவ்வளவு சொன்ன பிற்பாடுகூட அவரை கொஞ்சங்கூட கவனியாமல் திருமழிசையாழ்வார் "உம்மால் எனக்கு ஆகவேண்டி யது ஒன்றுமில்லை. நீர் எனக்கு வரங்கொடுக்க சக்தி யற்றவர். போய் வரலாம்" என்றார். இப்படிச் சொல் லியுங்கூட சிவபெருமான் கோபத்தை யடக்கிக்

கொண்டு "எங்களுடைய வரவு வீண்போகக்கூடாது. உமக்கு வேண்டிய வரங்களைக் கேளும் தருகிறேன்" என்றார். அவருடைய நிர்ப்பந்தம் பொறுக்காமல் "உம்மால் வைகுண்டம் கொடுக்க முடியுமானால் எனக்குக் கொடும்" என்றார். சிவபெருமான் தமக்கு அதைக் கொடுக்க சக்தியில்லையென்றும், அதைக் கொடுக்கக்கூடியவர் விஷ்ணுவே தவிர வேறெவரு மில்லை என்றும் சொன்னார். மறுபடியும் வேறே ஒரு வரனைக்கேளும் என்று நிர்பந்திக்க "வைகுண்டம் வேண்டுமானால், விஷ்ணுவைக் குறித்து மிகவும் கடு மையான தபஸ் செய்யவேண்டும். அதற்கு உபயோ கமானது நீண்ட வாழ்நாள். அதைக்கொடுக்க முடியு மானால் கொடும்" என்றார். இதற்கு சிவபெருமான் "ஒருவன் வாழ்நாளானது அவன் கர்மத்தைப் பொ றுத்தது. நீட்டவும் குறுக்கவும் எனக்கு சக்தியில்லை. வேறே வேண்டுவதைக் கேளு"மென்றார். இதைக் கேட்ட ஆழ்வார் அவரைப்பரிகாஸம் பண்ண எண்ணங் கொண்டவராய் "இந்த ஊசியின் பின்னே நூல் வரும்படியாக வரம் கொடும்" என்றார். இதைக் கேட்டதும் சிவனுக்கு கோபம் ரொம்ப அதிகமா யிற்று. "இந்த துஷ்டனை இப்பொழுதே கொன்று எரித்துவிடுகிறே"னென்றார். மிகவும் கோபத்துடன் நெற்றிக் கண்ணை திறந்துவிட்டார். பெரிய தீ உண் டாயிற்று. ஆழ்வார் அதைக் கொஞ்சங்கூட கவனி யாமல், அவரையும் அவருடைய தீயையும் போக்குவ தற்காக தன்னுடைய வலது கால் கட்டைவிரலின்

ஒரு பக்கத்தில் தன் கையிலிருந்த ஊசியினால் குத்த, அங்கிருந்து நெற்றிக்கண் நெருப்பைக் காட்டிலும் பெரியதான காட்டுத்தீ ஒன்று உண்டாயிற்று. இதை அணைப்பதற்காக சிவபெருமான் பல மேகங்களை ஏவினார். ஒரு பெரிய வெள்ளம் உண்டாயிற்று. ஆழ்வார் ஒன்றுக்கும் பயப்படாமல் விஷ்ணுவைக் குறித்து த்யானம் செய்துகொண்டிருந்தார். "இவ்வளவுதூரம் இவருக்கு கெடுதல் செய்ய முயன்றும், நம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லையே. இவருடைய பக்தியைக் காட்டிலும் மேலான பக்தி லோகத்தில் யாருக்கு உண்டு" என்று இவரிடம் ஸந்தோஷங்கொண்டு இவருக்கு "பக்தி ஸாரர்" என்று பெயர் கொடுத்து வாழ்த்திவிட்டு, தன் மனைவியுடன் ரிஷபவாகனத்தில் ஏறிக்கொண்டு கைலாஸம் போய்ச் சேர்ந்தார். தனக்கு இவ்வளவு தூரம் சிவபெருமான் கருணைகாட்டியதற்குக் காரணம் விஷ்ணுவென்று அறிந்து, திருமழிசையாழ்வார் முன்னிலும் அதிகமாக விஷ்ணு பக்தியையும், தபஸையும் செய்து வந்தார்.

இப்படி விஷ்ணு பகவானைக்குறித்து த்யானம் செய்துகொண்டிருந்தார். இதன் பிறகு அவர் திருவல்லிக்கேணிக்குப்போனார். அங்கே கஜேந்த்ரஸரஸென்று பேர்பெற்ற பொய்கையின் கரையிலே 700 வர்ஷம் யோகாப்யாஸம் பண்ணிக்கொண்டிருந்தார்.

### இவர் செய்த நூல்கள்.

தனக்கு விஷ்ணுவிடத்தில் உண்டான பக்தியை எல்லாரும் கண்டு வைஷ்ணவர்களாக வேண்டுமென்

றும், அதற்கு முன் தான் செய்திருந்த நூல்களை யெல்லாம் தூரத்தில் எறிந்துவிடவேண்டுமென்றும் எண்ணங்கொண்டு, திருமழிசையாழ்வார் பலபேர்கள் முன்னிலையில் பின்வருமாறு செய்தார். கரைபுரண்டு ஓடுகிற ஒரு வெள்ளத்தில் தான் செய்திருந்த நூல் களையெல்லாம் எறிந்தார். அநேக ஏடுகளை வெள்ளம் அடித்துக்கொண்டு போயிற்று. சில ஓலைகள் ஆற்றுப் போக்குக்கு எதிரே போயின. அவைகள் விஷ்ணு வைப்பற்றிய நூல்களாயிருந்தன. உடனே அங்கி ருந்த எல்லாரும் வைஷ்ணவர்கள் ஆனார்கள்.

இவரும் சுக்திஹாரனும்.

சுக்திஹாரனென்ற அஸுரன் ஒரு பயங்கரமான புலியை தன்னுடைய பலத்தால் அடக்கி, அதன்மீது ஏறிக்கொண்டு ஆகாச மார்க்கமாய் ஸஞ்சரித்துவந் தான். அவன் ஒரு ஸமயத்தில் ஒரு இடத்திற்கு வந் ததும், புலி முன்னால் போகவில்லை. வழி தெரியாதவ னைப்போல் தடுமாறிற்று. அதற்கு என்ன காரண மென்று அந்த அஸுரன் பார்க்க, கீழே ஒரு பக்தர் இருப்பதைக் கண்டான். அவருடைய பலத்தை அறிய அந்த அஸுரன் கீழே யிறங்கி வந்தான். வந் ததும் தன்னுடைய சக்தியினால் ஒரு விலையுயர்ந்த பீதாம்பரத்தை உண்டாக்கி, அதை அவர் உடுத்திக் கொண்டிருந்த கந்தை வஸ்த்ரத்திற்கு பதிலாகக் கட் டிக்கொள்ளும்படி சொன்னான். ஆழ்வாரோ அந்த பீதாம்பரத்தை தள்ளிவிட்டு, தம்முடைய தபோ பலத்தினால் எத்தனையோ மடங்கு மேலான ஒரு

பீதாம்பரத்தை உண்டாக்கிக் காட்டினர். இதைக் கண்டதும் அஸுரன் வெட்கமடைந்து, அவருக்கு தன்னிடமிருந்த ஒரு உயர்ந்த மணிமாலையைக் கொடுத்து அதை ஜபமாலையாகத் தரிக்கும்படி வேண்டிக் கொண்டான். இதைக் கேட்ட ஆழ்வாரோ அதையும் ஒத்துக்கொள்ளாமல், தன் கழுத்திலிருந்த துளஸி மாலையை எடுத்து அவனுக்குக் காட்டவே, அது துளஸிமாலையாயில்லாமல், விலைமதிக்கமுடியாத நவரத்னமாலையாக விளங்கிற்று. இதைக் கண்ட சுக்திஹாரன் தனது கௌரவத்தை விட்டுவிட்டு, அவரை நமஸ்காரம்செய்து, "உம்மைக் காட்டிலும் அதிக பக்தியுடன் கூடினவரை நான் பார்த்ததேயில்லை. எல்லாரையும் வென்று வந்த என்னை நீர் நொடிப்பொழுதில் ஜயித்து விட்டதால், நீரே எனக்கு குரு" என்று சொல்லிவிட்டு, அவருடைய உத்தரவைப்பெற்று வேறு வழியாகப் போனன்.

### இவரும் கோங்கண சித்தனும்.

ஒரு நாள் கொங்கணசித்தன் என்ற ரஸவாதி இவருடைய மகிமையைக் கேட்டு இவரிடம் வந்து இவர் பக்தியைக் கண்டு, நமஸ்காரஞ்செய்து, இவருக்கு இரும்பைப் பொன்னுக்கக்கூடிய ஒரு சிறு மாத்திரையைக் கொடுத்தான். இவர் அதை கொஞ்சங்கூட கவனியாமல், தன்னுடைய திருமேனியிலிருந்த அழுக்கை கொஞ்சம் திரட்டி, காதிலிருந்து கொஞ்சம் குறும்பையையும் சேர்த்து அந்த ரஸவாதியிடம் கொடுத்து "இது உலகத்திலுண்டான கற்களையெல்

லாம் பொன்னுக்கும் சக்தியுள்ளது" என்று சொன்னார். இதை அந்த ரஸவாதி பரிசோதித்துப் பார்த்து, அப்படியே யிருக்கக்கண்டு மிகவும் ஸந்தோஷப்பட்டு, அவருக்கு அடிமை யென்று சொல்லிவிட்டு, இவருடைய உத்தரவு பெற்று வீடு சென்றான். இவருடைய தயவினால் வெகுகாலம் இஷ்டப்படி பணத்தை ஸம்பாதித்து வந்தான்.

### இவரும் முதலாழ்வார்களும்.

பிறகு ஆழ்வார் தபஸ் செய்ய ஒரு பெரிய மலைப் ரதேசத்துக்குப் போனார்.

அங்கே ஒரு காட்டு மத்தியில் ஒரு குகையில் இவர் தவம் செய்துவந்தார். முதலாழ்வார்கள் மூவரும் அந்த ஸமயத்தில் ஒவ்வொரு இடமாகப்போய் அவ்விடத்திலுள்ள பெருமாள்களை தர்சித்து வந்தார்கள். அப்படி ஸ்தல யாத்ரை செய்கையில், திருமழிசை யாழ்வார் இருப்பிடத்தை யறிந்து இவரிடம் வந்தார்கள். வந்ததும் ஒருவரை யொருவர் யோகபலத்தால் கண்டுகொண்டு, மிகவும் ஸந்தோஷத்துடன் ஈச்வரனைப்பற்றி ஸ்துதிப்பதும், பாடுவதும், ஆடுவதுமாய் காலத்தைக் கழித்துவந்தார்கள். இப்படி இந்நான்கு ஆழ்வார்களும், ஒருமனப்பட்டு சிலகாலம் கழிந்தபிறகு எல்லாருமாக பேயாழ்வார் பிறந்த இடமாகிய மைலாப்பூருக்குப் போய் அந்தப் பேயாழ்வார் அவதரித்த இடமாகிய "கைரவ தீர்த்தத்தின்" கரையில் சிலகாலம் யோகாப்யாஸம் செய்துவந்தார்கள். றகு முதலாழ்வார்கள் மூவரும் திருமழிசை யாழ்

வாரை விட்டுப் பிரிந்துபோனார்கள். திருமழிசை யாழ்வாரும் தாம் பிறந்து வளர்ந்துவந்த மஹீஸார புரத்தில் கொஞ்ச காலம் இருக்க எண்ணங்கொண்டு, அந்த இடத்திற்கு போனார்.

காஞ்சீபுரத்துக்குப் போனது.

தம்முடைய ஜன்மபூமிக்குப் போனபிறகு தாம் வழக்கம்போல் நாமம் போட்டுக்கொள்வதற்காக திரு மண் இருக்கக்கூடிய இடத்தை வெட்டிப் பார்த்தார். எப்பொழுதும் அகப்படக்கூடிய இடத்தில் ஒன்றும் அகப்படவில்லை. உடனே வருத்தம் மேலிட்டவராய் திருப்பதி வெங்கடாசலபதியைக் குறித்து ஸ்தோத்ரம் செய்யலானார். இவருடைய கனவில் ஸ்வாமி வந்து 'நீர் வருத்தப்படவேண்டாம். பொய்கையாழ்வார் அவதரித்த இடமாகிய காஞ்சீபுரத்துக்குப் பக்கத்திலுள்ள திருவெஃகாவில் உமக்கு வேண்டிய திருமண் அகப்படும். போய் எடுத்துக்கொள்ளும்,' என்றார். மறுநாள் காலையில் ஆழ்வார் அவ்வூரை நோக்கி புறப்பட்டார். தனக்கு ஸ்வப்னத்தில் தோன்றிய விடத்தில் திருமண் இருக்கக்கண்டு எடுத்துக்கொண்டு தமது ஊருக்குப் போய் அங்கே சில காலத்தைக் கழித்தார். கடைசியாய் ஊரைவிட்டுப் புறப்பட்டு காஞ்சீபுரத்திற்கு வந்து அங்கே திருவெஃகாவில் பெருமாளை தர்சித்துக்கொண்டு வெகுகாலமிருந்தார்.

திருமழிசை யாழ்வாரும் கணிகண்ணனும்.

இப்படியிருக்கும் ஸமயத்தில் இவருக்கு பால்ய வயஸிலேயே சிஷ்யனான வேளாளப்பையனான கணி

கண்ணன் வந்து இவரை நமஸ்காரம் செய்தான். அன்றுமுதல் உபாதானம் செய்து தன் காலத்தைக் கழித்துக்கொண்டு இவருக்கு வேண்டிய வேலைகளைச் செய்து வந்தான். அவருடைய ஆச்ரமத்தை தினந் தோறும் அதிகாலையில் ஒரு கிழட்டு ஸ்திரீ பெருக்கி மெழுகி, கோலம்போட்டு, அலங்கரித்து வருவது வழக்கம். அவள் வெகுகாலமாய் இப்படி தன்னாலான கார்யங்களை இவ்வாழ்வாருக்காக செய்துவந்தாள். ஒருநாள் ஆழ்வார் இவளுக்கு வேண்டிய வரனைக் கேட்கும்படி உத்தரவு செய்தார். அதைக்கேட்ட ஸ்த்ரீ அவரை மிகவும் வினயத்துடன் நமஸ்கரித்து தனக்கு நீங்காத யௌவனம் வேண்டுமென்று கேட்க, அப்படியே தந்தேனென்றார். அவள் உடனே அதிக ஸுந்தரவதியாகிவிட்டாள். பால்ய வயஸு வந்துவிட்டது. அவளை அந்த தேசத்து அதிபதியான பல்லவராயன் கண்டு மிகவும் ஆசைப்பட்டு, அவளுக்கு வேண்டிய ஆடை, ஆபரணங்களைக் கொடுத்து அவளைப் பட்டமஹிஷியாக்கிக்கொண்டான். இப்படியிருக்கும் ஸமயத்தில் அந்த அரசனுக்கு யௌவனம் குறைந்தது. அவளுக்கோ வாடாத யௌவனமாயிருந்தது. ஒருவருக்கொருவர் நடந்த ஸம்பாஷணை மூலமாய் இது எப்படி அவளுக்கு வந்தது என்பதை அரசன் அறிந்துகொண்டான். தனக்கும் நீங்காத யௌவனத்தை எப்படியாவது பெறவேண்டு மென்று தீர்மானித்துக்கொண்டு, அதற்காக் மறுநாள் காலையில் கணிகண்ணன் உபாதானத்துக்கு வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

### பல்லவராயனும் கணிகண்ணனும்.

விடிந்ததும் வழக்கம்போல் கணிகண்ணன் உபாதானத்துக்கு வந்தான். அவனை அரசன் ரொம்ப ப்ரீதியுடன் உபசரித்து கடைசியாய், தான் திருமழிசை யாழ்வாரை தர்சனம்செய்ய வேண்டுமென்றும், அதற்காக அவரை அழைத்துவர வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டான். . அதற்கு கணிகண்ணன் தன் குருவை அங்கு வரவழைக்க முடியாதென்று தெரிவித்தான். அரசனே தன்னை அவரிருக்கும் இடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், எப்பொழுதும் மாறாத யௌவனம் தனக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டுமென்று கணிகண்ணனை மிகவும் வேண்டிக்கொண்டான். கணிகண்ணன், இப்பேர்ப்பட்ட கெடுதலான விஷயங்களில் ஆசைப்படுகிறவர்களை தன்னுடைய குரு கண்ணால் பார்க்கக்கூட மாட்டாரென்று சொல்லி ஓடிப்போய்விட்டான். அரசனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. மந்த்ரிகளை அழைத்து அவர்களிடத்தில் தன் எண்ணத்தைச் சொன்னான். அவர்களும் எப்படியாவது கணிகண்ணனைக்கொண்டு அரசர்மீது ஒரு பாட்டுப்பாடச் சொல்ல வேண்டுமென்றும், அப்படி அவன் ஏதாவது பாடினால் அது அப்படியே ஏற்படுமென்றும் சொன்னார்கள். மறுநாள் கணிகண்ணன் வரவே, அவனை தனக்கு மாறாத யௌவனம் வரும்படி ஒரு பாட்டுப் பாடும்படி அரசன் வேண்டிக்கொண்டான். அவன் முடியாதென்று பல தடவை சொல்லியும் கேளாமல்

அரசன் தொந்தரவு செய்யவே, அவன் கடவுளைப் பற்றி ஒரு பாட்டைப் பாடினன். அதைக்கேட்ட அரசன் கோபமடைந்து கணிகண்ணனை ஊரை விட்டு ஓடும்படி உத்தரவிட்டான். கணிகண்ணன் இந்த உத்தரவுக்கு கொஞ்சங்கூட பயப்படவில்லை. இனிமேல் நமக்கு இந்த ஆழ்வாருக்கு ஊழியஞ்செய்ய முடியாதேயென்று மிகவும் வருத்தப்பட்டு குருவினிடம் போனன். அவரிடத்தில் மிகவும் வணக்கத்துடன் நடந்த ஸமாசாரங்களையெல்லாம் உள்ளதை உள்ளபடியே தெரிவித்து, இனிமேல் தான் அவருக்கு ஊழியஞ்செய்ய முடியாதே யென்று அழுதான். உடனே அந்த ஆழ்வார் கோயிலுக்குள்போய் பின் வரும் பாட்டைப் பாடினர்.

“கணி கண்ணன் போகின்ருன் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—தணிவுடைய
செந்நாப்புலவனும் போகின்றேனீயு முன்றன்
பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்.”

[பதவுரை.] கணிகண்ணன் - கணிகண்ணன் என்னும் பெயருடைய என்னடியவன், போகின்ருன்-என்னைவிட்டு நீங்குகின்ருன், (ஆகவே,) காமரு - அழகிய, பூ-புஷ்பங்கள் நிறைந்த, கச்சி - திருக்கச்சிப்பதியில், மணிவண்ணா - (எழுந்தருளிய) பெருமாளே, நீ-தேவரீர், கிடக்கவேண்டாம் - இவ்விடத்தில் தங்கியிருக்க வேண்டாம்; துணிவுடைய - உன் திருவடிப்பற்றில் உறுதியுள்ள, செந்நாப்புலவனும் - தேவரீரது திருப் புகழைப்பேசும் புண்யத்தால் செம்மையடைந்த

நாவையுடைய சிற்றறிவுடையேனுகிய நானும், போகின்றேன் - போகிறேன் (ஆகையால்,) நீயும் - தேவரீரும், உன்றன் - உமது, பை - பசுமையுடைய, நாகப் பாய் - ஸர்ப்ப சயனத்தை. சுருட்டிக்கொள்-சீக்ரமாக எடுத்துக்கொள்ள வேண்டுகிறேன்.

[பொழிப்புரை.] மிக அழகிய காஞ்சீபுரத்தில் வாழும் மணிவண்ண வரதரே! கணிகண்ணன் என்னை விட்டுப் பிரிவதால் தேவரீர் தயவுசெய்து புறப்படும். அடியேனும் உம்மைப் பின்பற்றுகிறேன்.

இதைக்கேட்ட பெருமாளும் அவர் சொல்லைத் தட்டாமல் தாமும் அந்த ஊரைவிட்டுப் புறப்பட்டுப் போக தயாராயிருப்பதாய்த் தெரிவித்தார். மூவருமாய் புறப்பட்டுப்போனுர்கள். இவர்கள் ஊரைவிட்டுப் போகவே, அந்த ஊருக்கும் அதன் அரசனுக்கும் பலவித தீங்குகள் நேரிட்டன. அரசன் தான் செய்த தப்பிதத்தைப் பொறுத்துக்கொள்ளும்படி மறுபடியும் அந்த ஆழ்வாரையும் கணிகண்ணனையும் வேண்டினுன். கணிகண்ணன் அப்படியே அவனை மன்னித்தான். மறுபடியும் ஊருக்கு முன்போல ஸ்வாமியை கொண்டுவரவேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். ஆழ்வாரும் ஸ்வாமியைநோக்கி காலத்துக்கு தகுந்தபடி முன்பாடின பாட்டை திருப்பிப் பாடினுர்.

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி
மணிவண்ணு நீகிடக்கவேண்டுந்—துணிவுடைய
செந்நாப்புலவனும் போக்கொழிந்தே னீயுமுன்றன்
பைந்நாகப்பாய் படுத்துக்கொள்."

[பதவுரை.] கணிகண்ணன் - கணிகண்ணன் என்பவன், போக்கு ஒழிந்தான் - என்னைவிட்டு நீங்கவில்லை, ஆகவே, காமருபூங்கச்சி - மிக அழகிய திருக்கச்சிப்பதியில் எழுந்தருளிய, மணிவண்ணா - மணிவண்ணரே, நீ கிடக்கவேண்டும் - தேவரீர் முன் இருந்த இடத்தில் வந்து தங்கவேண்டுகிறேன், துணிவுடைய செந்நாப்புலவனும் - உமது அருளால் உமது பாதபத்மங்களில் மனவுறுதியும் உமது திருப்புகழைப் பேசும் நாப்பழக்கமும் உடைய சிற்றறிவுடையேனும், போக்கொழிந்தேன் - போகவில்லை, ஆகையினால், நீயுமுன்றன் - தேவரீர் உமது, பைந்நாகப்பாய் படுத்துக்கொள் - ஸர்ப்ப சயனத்தில் யோக நித்ரை செய்யவேண்டும்.

[பொழிப்புரை] காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் மணிவண்ணரே, கணிகண்ணன் போகாமல் நின்றுவிட்டான், நானும் போகாமல் நின்றுவிட்டேன், ஆகையால் நீரும் இங்கேயே இருக்கவேண்டும்.

ஸ்வாமியும் ஸந்தோஷத்துடன் கூடவருவதாய்த் தெரிவித்தார். உடனே மூவரையும் மிகவும் மர்யாதையுடனும் கௌரவத்துடனும் அந்த அரசன் அழைத்துக்கொண்டு திருவெஃகாவுக்குப் போனான். தம்முடைய பக்தரான ஆழ்வார் சொன்னபடி ஸ்வாமி செய்ததினால், அந்த ஸ்வாமிக்கு அன்றுமுதல் "யதோக்தகாரி" என்றும், "சொன்னவண்ணஞ் செய்த பெருமாள்" என்றும் ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும் பெயர்கள் வழங்கிவருகின்றன. மறுபடியும் அந்த

ராஜ்யம் செழிப்புடன் கூடினதாக ஆயிற்று. இதை யெல்லாம் கண்ட பல்லவராய அரசன் அந்த ஸ்வாமிக்கு வேண்டிய கைங்கர்யங்களைச்செய்து, தானும் அவ்வாழ்வாருக்கு ஒரு முக்ய சிஷ்யனுனன்.

ஆழ்வார் அவ்விடத்திலிருந்து திருக்குடந்தை (கும்பகோணத்துக்கு) ஸ்வாமி தர்சனத்திற்காக போகப் புறப்பட்டார்.

ஆழ்வாரும் வேதம் அத்யயனம் செய்பவர்களும்.

போகும் வழியில் பெரும்புலியூர் என்ற ஒரு ஊரில் தங்கினர். அங்கே ப்ராம்மணர்களிருக்கும் அக்ரஹாரத்தின் வழியாகப் போனுர். அங்கே சில ப்ராமணர்கள் வேதம் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அதை கேட்டவுடன் இவர் அங்கே சற்று தங்கி அந்த வேதத்தைக் கேட்டார். அவ்விடத்திலிருந்த ப்ராம்மணர்கள் இவர் மகிமையை அறியாமல், இவரை சூத்ரனென்று எண்ணி வேதம் சொல்லுவதை நிறுத்திவிட்டார்கள். ஆழ்வார் அதைக்கண்டு திரும்பி வேறுவழியாக அவ்வூர்க் கோயிலுக்குப் போனுர். அந்த ப்ராம்மணர்கள் நிறுத்தினது எங்கே என்று தெரியாமல் கஷ்டப்பட்டார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான இடத்தைச் சொன்னுர்கள். இவ்வளவு கஷ்டம் ஏற்பட்டதற்குக் காரணமென்னவென்று பார்க்கும்பொழுது, வந்த விருந்தாளியை இன்னுரென்று விசாரியாமல் அவமானம் செய்ததுதான் என்று தோன்றிற்று. உடனே அந்தப்ராம்மணர்கள் ஒன்றுசேர்ந்துஅவரைப் பின்தொடர்ந்தார்கள். விட்ட இடம் என்னவென்று

கேட்க, அவர் கீழே கிடந்த சில கறுப்புத்தான்யங்களை தன்னுடைய கைந்நகங்களால் பிரித்தார். இதைக் கண்ட ப்ராம்மணர்களுக்கு விட்ட இடம் "க்ருஷ்ணாணும் வ்ரீஹீணும் நகநிர்ப்பிந்நம்" என்று தெரிந்து ஸந்தோஷமடைந்து அவரை வணங்கிவிட்டுப் போனார்கள்.

### திருமழிசை ஆழ்வாரும் பெரும்புலியூர் ஸ்வாமியும்.

திருமழிசை யாழ்வார் அவ்வூரிலுள்ள பெருமாளை நமஸ்காரம்பண்ணி ப்ரதக்ஷணம் செய்துவரும் ஸமயத்தில், ஸ்வாமியும் இவர் திரும்புகிற முகமாகவே திரும்பித் திரும்பி இவருக்கு தர்சனம் கொடுத்தார். இதைக்கண்ட கோயில் பட்டர் மிகவும் ஆச்சர்யப்பட்டு கோயில் அதிகாரிகளுக்கு ஸமாசாரம் அனுப்பினான். அவர்கள் வந்து இவ்வாழ்வாரை அதிக மர்யாதையுடன் நடத்தினார்கள்.

### ஆழ்வாரும் சில யாகஞ் செய்யும் தீக்ஷிதர்களும்.

பெரும்புலியூருக்கு ஸமீபத்தில் சில தீக்ஷிதர்கள் யாகஞ் செய்தார்கள். இவ்வாழ்வாருடைய மகிமையைக் கேட்டதும் இவரையும் அங்கு அவர்கள் மிகவும் ப்ரீதியுடன் கூட்டிக்கொண்டுபோய் முதல் தாம்பூலம் முதலிய மர்யாதைகளை இவருக்கு செய்தார்கள். இதை சில ப்ராம்மணர்கள் ஸகிக்காமல் இவ்வாழ்வாரையும், அங்கேயுள்ள தீக்ஷிதர்களையும் வாயில் வந்தபடி கெட்ட வார்த்தைகள் பேசினார்கள். ஆழ்வார் இவைகளையெல்லாம் வெகுகாலம் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தார். கடைசியாய் விஷ்ணு

வைக் குறித்து ஸ்தோத்ரம் செய்ய, ஸ்வாமி க்ருபையால் அவர்கள் கண்ணுக்கு இவரே விஷ்ணுவாய்த் தோன்றினர். அவர்கள் உடனே இவர் கால்களில் விழுந்து, செய்த தப்பிதத்தை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். இவர் அவர்களைக் கோபிக்காமல் அவர்களுக்கு வேண்டிய வைஷ்ணவ நூல்களையெல்லாய் உபதேசம் செய்துவிட்டு, திருக்குடந்தை போனர்.

திருமழிசை யாழ்வாரும் திருக்குடந்தைப் பெருமாளும்.

அங்கே பெருமாளான ஆருவமுதன் (இடையில்லாத அமுதத்தைக் கொடுப்பவர் என்பது பொருள்.) கோயிலுக்குப் போனர். அங்கே அந்தப் பெருமாள் சயன நிலைமையில் இருந்தார். ஆழ்வார் அவரைப் பார்த்து தனக்கு எழுந்திருந்து தர்சனம் கொடுக்க வேண்டுமென்று கேட்டார். அவரும் ஆழ்வாருடைய பக்தியைக் கண்டு எழுந்திருந்து தர்சனம்கொடுக்க எண்ணி பாதி யெழுந்திருந்துவிட்டார். இனி நாம் ஸ்வாமியை ச்ரமப்படுத்தக்கூடாதென்று எண்ணி, அப்படியே நிற்கும்படி வேண்டிக்கொள்ள, அந்தப் பெருமாளும் இன்றைக்கும் அப்படியே எல்லோருக்கும் தர்சனம் கொடுத்து வருகிறார். பெருமாளுடைய இந்தவிதமான சயனத்தை "உத்தானசயன" மென்று (அதாவது எழுந்திருந்த படுக்கை) சொல்வது வழக்கம்.

அநேககாலம் அங்கேயே தங்கி ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டிருந்து அங்கே யுள்ளவர்களுக்கு

வைஷ்ணவமதத்தை உபதேசித்துக்கொண்டும், மதத்தைப் பரவச் செய்துகொண்டும் வந்தார்.

இவர் இந்த உலகத்தில் 4700-வர்ஷகாலம் யோகத்தால் வஸித்தார். கடைசியாய் கும்பகோணத்தில் விண்ணுலகமடைந்தார்.

மங்களா சாஸனம்.

இவ்வாழ்வார் 16-ஊர் பெருமாள்கள் விஷயமாய் பாட்டுக்களைப் பாடி அருளினர். அவைகளாவன :—(1) திருவரங்கம் (2) திருஅன்பில் (3) திருப்பேர்நகர் (4) திருக்குடந்தை (5) கபிஸ்தலம் (6) திருக்கோஷ்டியூர் (7) திருக்குறுங்குடி (8) திருப்பாடகம் (9) திருஆரகம் (10) திருக்கூடல் (11) திருவெஃகா (12) திருவெவ்வளூர் (13) திருவேங்கடம் (14) திருப்பாற்கடல் (15) திருத்வாரகை (16) பரமபதம்.

அருளிச்செயல்.

திருமழிசை யாழ்வார் அருளிச்செய்த பாசுரங்கள் 216. இவைகளில் முதல் 96-பாசுரங்களுக்கு நான்முகன் திருவந்தாதி யென்றும், நான்காம் திருவந்தாதி யென்றும் பெயர். மீதமுள்ள 120-பாசுரங்களுக்கு திருச்சந்த விருத்தம் என்று பெயர்.

தனியன்.

இந்த ஆழ்வாருக்கு இரண்டு தனியங்கள் வழங்கி வருகின்றன. முதலாவது தனியன் சீராமப்பிள்ளையால் அருளிச்செய்யப்பட்டது.

“ நாராயணன் படைத்தான் நான்முகனை—நான்முகனுக்
கேரார் சிவன்பிறந்தா னென்னுஞ்சொல்—சீரார்
மொழிசெப்பி வாழலாம்நெஞ்சமே !
மொய்பூ மழிசைப் பரனடியே வாழ்த்து.”

இரண்டாவது தனியன் திருக்கச்சி நம்பியால் அருளிச் செய்யப்பட்டது. அதை திருச்சந்த விருத்தத்திற்கு முன்சொல்வது வழக்கம். அது வருமாறு.

"உலகு மழிசையு முள்ளுணர்ந்து—தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும்—மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.''

குறிப்பு :—இவ்வாழ்வார் பல மதங்களையெல்லாம் அறிந்து, அதில் த்ருப்தியடையாமல் கடைசியாய் வைஷ்ணவ மதத்தை அபிமானித்தபடியால் இவர் பாடின பாசுரங்களில் பக்தி மிகவும் அதிகமாயும், பல மதங்களுக்கும் வைஷ்ணவ மதங்களுக்குமுள்ள வித்யாஸங்கள் நன்றாய்க் காட்டப்பட்டு மிருக்கின்றன.

## திருமழிசை ஆழ்வாரின் காலம்.

முதலாழ்வார்கள் இவரை ஸந்தித்ததாயும், பேயாழ்வார் இவரை சைவ மதத்திலிருந்து வைஷ்ணவ மதத்திற்கு திருத்தினதாயும் சொன்னோம். ஆதலால் அவர்கள் இருந்த எழாவது நூற்றாண்டின் மத்தியில் இவர் இருந்திருக்கவேண்டும். இவர் பௌத்தருக்குப்பின் வந்திருக்கவேண்டுமென்று அவர் செய்த நூல்களிலிருந்து ஏற்படுகிறது. மகேந்த்ரவர்மன் என்ற பல்லவராயன் சைவன். அவன் பிள்ளையான நரஸிம்மவர்மனும், அவனுக்குப் பின் வந்த சுந்திவர்மன் முதலியவர்களும் வைஷ்ணவர்கள் என்பதற்குப் பல செப்புப்பட்டயங்கள் இருக்கின்றன. ஆதலால் இவர் கி. பி. எழாவது நூற்றாண்டின் கடைசியிலும் எட்டாவது நூற்றாண்டின் முன்பாகத்திலும் வஸித்திருக்கவேண்டும்

---

## VIII. நம்மாழ்வார்.



இந்த ஆழ்வார் திருநெல்வேலிக்கு ஸுமார் 18 மைல் கிழக்கேயுள்ள ஆழ்வார் திருநகரி என்னுமிடத்தில் அவதரித்தார். அந்தக் காலத்தில் அந்த ஊருக்கு "திருக்குருகூர்" என்று பெயர். ஆழ்வார் பிறந்தபடியினுல் அந்த ஊருக்கு ஆழ்வார் திருநகரி என்ற பெயர் உண்டாயிற்று. (அதற்கு ஆழ்வார் பிறந்த மேன்மையுடன் கூடின ஊர் என்று பொருள்.) அந்த ஊர் தாம்ப்ரபர்ணி நதிக்கரையில் இருக்கிறது. இவர் தகப்பனுர் பெயர் காரியார். இவர் தாயார் பெயர் உடைய நங்கையார். இவர்கள் இருவரும் ஜாதியில் வேளாளர்கள். வெகு காலம் வரையில் அவர்களுக்கு பிள்ளை யொன்றும் பிறக்கவேயில்லை. அதற்கு வேண்டிய வைத்யங்களைச் செய்வதற்காக காரியாரை அவர் மாமனுர் திருவாங்கூருக்கு ஸமீபத்திலுள்ள திருவண்பரிசாரத்துக்கு அழைத்துப்போனுர். திருவண்பரிசாரம் என்னும் ஊர் உடைய நங்கையாருக்குப் பிறந்த விடம். அது அநேக வைத்யர்களுக்கும் மந்த்ரவாதிகளுக்கும் வெகு காலமாய்ப் பேர்போனது. மாமனுர் இஷ்டப்படி அவர் ஊருக்குப்போயும் அங்கு ஒரு ப்ரயோஜனமும் ஏற்படாமல் போகவே, காரியார் மறுபடியும் ஆழ்வார் திருநகரிக்குத் திரும்பிப்போனுர். போகும்பொழுது திருக்குறுங்குடி (ஆழ்வார் திருநக

ரிக்கு ஸுமார் 25 மைல் தூரத்திலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம்) யில் சிலகாலம் அவர்கள் இருவரும் தங்கினார்கள். அந்த ஸ்வாமியை நமஸ்காரம் செய்து தங்களுக்கு புத்ர பாக்யம் அளிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். ஸ்வாமியும் கோவில் பட்டர் மூலமாய் "தாமே பிள்ளையாய் வந்து பிறப்பதாய்" வாக்களித்தார். கொஞ்சகாலம் அங்கே இருந்து அந்த ஸ்வாமிக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துவிட்டு தங்கள் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அது முதல் உடைய நங்கையார் கர்ப்பவதியானாள்.

## அவதாரத்தின் விசேஷம்.

பவிஷ்யத் புராணம் (வரப் போவதைச் சொல்லும் புரர்ணம்), பார்க்கவ புராணம், பத்ம புராணம் ப்ரும்மாண்ட புராணம், மார்க்கண்டேய புராணம் முதலிய புராணங்களில் நாராயணனான விஷ்ணுவானவர் தாமே கலியுக ஆரம்பத்தில் சூத்ர வம்சத்தில் விஷ்வக்ஸேனருடைய அம்சமாகவும், தான் எப்பொழுதும் மார்பில் அணிந்து கொண்டிருக்கும் கௌஸ்துபத்தினுடைய அம்சமாகவும் பூலோகத்தில் அவதாரம் செய்யப் போவதாய், சொல்லியிருக்கிறது. ஆகையினால் இந்த ஆழ்வார், விஷ்ணு, விஷ்வக்ஸேனர், கௌஸ்துபம் ஆகிய மூன்றினுடைய அம்சம். இவர் கலியுகம் ஆரம்பித்து 43 - வது நாள், ப்ரமாதிவர்ஷம் வைகாசி மாதம் 12-ந் தேதி, சுக்லபக்ஷம், வெள்ளிக்கிழமை, பௌர்ணமிதிதி, விசாக நக்ஷத்ரம், கடக லக்னத்தில் பூலோகத்தில் முன்சொன்ன விஷ்ணுபக்தர்க

ளான காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் குழந்தையாய் அவதரித்தார்.

பால்ய வயஸின் விசேஷம்.

பிறந்ததும் மற்ற குழந்தைகளைப் போல் இந்தக் குழந்தை அழவேயில்லை. பால் குடிக்கவுமில்லை. வாயைத் திறக்கவுமில்லை. அப்படிக்கிருந்தும் அக்குழந்தையின் உடம்பு கொஞ்சங்கூட வாடாமல் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தது. தாய் தந்தையர்கள் ஈச்வரன் மீது பாரத்தைப் போட்டுவிட்டு, பிறந்த பன்னிரண்டாம் நாள் குழந்தையை எடுத்துக்கொண்டு அந்த ஊர்க் கோயிலுக்குப் போய், அங்கே குழந்தைக்கு ஸ்வாமி தர்சனம் செய்து வைத்தார்கள். உலக நடவடிக்கைகளுக்கு மாறான பிறவியுடன் கூடின அந்தக்குழந்தைக்கு "மாறன்" என்று பெற்றோர்கள் பெயரிட்டார்கள். அந்தக் கோயிலில் ஒரு பெரிய புளிய மரம் ஒன்று இருந்தது. (ஆதிசேஷனே இப்படி புளியமரமாக உண்டாகி இந்தக் குழந்தைக்கு குடைக்கு ஸமமான நிழலைக் கொடுத்தார் என்பது ஐதீகம்.) அந்த மரத்தினடியில் ஒரு தொட்டிலில் இக்குழந்தையை விட்டுவிட்டார்கள்.

சடகோபன் என்னும் பெயர்.

கர்ப்பத்திலிருக்கும்பொழுது குழந்தைகள் மிகவும் புத்திசாலிகளாயிருக்கின்றனவாம். பிறந்ததும் பேச ஆரம்பிக்கும்பொழுது 'சடம்' என்னும் ஒரு காற்று அவர்களைப் பேசமுடியாமல் செய்கிறது. இந்

தக் குழந்தை அப்படிப்பட்ட சடமென்னும் காற்றை "ஹூம்" என்ற சப்தத்தினுல் ஜயித்துத் தன் கிட்ட வராமல் தடுத்தபடியினுல் இவருக்கு "சடகோபர்" என்ற பெயர் உண்டாயிற்று.

தாய் தந்தையர்கள் தமக்குப் பிறந்த குழந்தை ஸாதாரணக் குழந்தையல்ல வென்றும், தெய்வீகப் பிறவி யென்றும், அதற்காக தாங்கள் வருத்தப்படக் கூடாதென்றும் எண்ணி, அந்த ஊர் ஸ்வாமியான ஆதிநாதன் மேல் பாரத்தைப் போட்டு விட்டு குழந்தையையும் புளிய மரத்தடியில் ஒரு தொட்டிலில் விட்டு விட்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள். இவர் பதினுறு வர்ஷ காலம் பேசாமலும், கண்களைத் திறவாமலும், ஒன்றிலும் ஆசைப்படாமலும் ஈச்வர த்யானம் செய்து வந்தார். கடைசியாய் ஈச்வரன் உத்தரவுப்படி விஷ்வக்ஸேனர் தேவலோகத்திலிருந்து வந்து இவருக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களை செய்வித்து, வேண்டியபடி உபதேசமும் செய்துவிட்டு தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

### நம்மாழ்வாரும் மதுர கவியும்.

மதுரகவி என்னும் பதத்திற்கு இனிமையாய் பாடுபவர் என்று அர்த்தம். இப்பெயர் கொண்ட ஒரு பக்தர் ஒரு ஸமயம் ஸ்வாமி தர்சனத்திற்காக ஒவ்வொரு ஊராய்ப் போய் கடைசியாய் அயோத்தியை அடைந்தார். அங்கே ஒருநாள் இரவு தென்திக்கில், ஒரு ப்ரகாசமான தேஜஸ் அவர் கண்ணுக்கு த்தோன்றிற்று. காட்டுத் தீ யென்று அதை எண்ணி மதுர

கவி சும்மா இருந்துவிட்டார். மறுநாளும் அப்படியே தோன்ற, அதை இன்னதென்று கண்டு பிடிப்பதற்காக பகல் முழுவதும் தூங்கிவிட்டு, இரவில் அதை அடையாளமாய் வைத்துக்கொண்டு தெற்கே போனார். கடைசியாய் ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அங்கே ஏதாவது விசேஷமிருக்கும் என்று தீர்மானமாய் யெண்ணினர். அங்கே ஒன்றையும் காணாததனால் மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டு மறுபடியும் தெற்கே போய் ஆழ்வார் திருநகரிக்கு வந்து சேர்ந்தார். அவ்விடத்தில் நம்மாழ்வாரைப்பற்றிய ஆச்சர்யத்தைக் கேட்டு கோயிலுக்குப்போய், ஆழ்வார் முன்னிலையில் வந்து ஒரு சிறு கல்லை யெடுத்து இவர் பக்கத்தில் எறிந்தார். ஆழ்வாரும் திடுக்கிட்டாற்போல் விழித்துக் கொண்டார். உடனே மதுரகவி இவருடைய ஞானம் எப்படிப்பட்டது என்று அறிவதற்காக "செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே வளரும்" என்று கேட்டார். (சரீரமானது ஞானமில்லாதது. ஆத்மாவானது ஞானத்துடன் கூடினது. ஆத்மாவானது சரீரத்துடன் சேர்ந்தால், அது எதை அனுபவிக்கும். எங்கே வஸிக்கும், என்பது பொருள்.) ஆழ்வாரும் இதன் கருத்தை நன்றாய் அறிந்து உடனே "அத்தைத் தின்று அங்கேயே வளரும்" என்றார். (சரீரத்தைச் சேர்ந்த ஸுக துக்கங்களை அனுபவித்துக்கொண்டு அங்கேயேயிருக்கும் என்பது பொருள்.) இதற்கு பலவிதமாய் தாத்பர்யம் சொல்வது வழக்கம்.

இந்த வார்த்தைகள் அவருக்கு அதிக ஸந்தோஷத்தைக் கொடுத்தபடியால், அவர் அன்று முதல் இந்த ஆழ்வாருக்கு முக்யமான சிஷ்யரானார். தனக்கு வேண்டிய உபதேசங்களைச் செய்யும்படி மதுரகவி மிகவும் வணக்கத்துடன் வேண்டிக்கொண்டார். அப்படியே ஆழ்வாரும் அவருக்கு க்ருபை செய்தார்.

மங்களா சாஸனம்.

ஈச்வரனே இவ்வாழ்வார் மூலமாய் பூலோகத்தின் நன்மைக்காக அவதாரஞ் செய்தாரென்று முன் சொல்லப்பட்டது. இவருக்கு தன் தர்சனத்தைக் கொடுப்பதற்காக தன்னுடைய மனைவிகளான ஸ்ரீதேவியுடனும், பூதேவியுடனும், கருட வாஹனத்தின் மீது ஏறிக்கொண்டு, இந்த ஆழ்வார் முன் தோன்றினார். இதுவுமல்லாமல் தன்னுடைய கருணையைக் காட்டுவதற்காக "நம்மாழ்வார்" என்ற ஒரு பெயரையும் இவருக்குக் கொடுத்தார்.

நம்மாழ்வாரும் அவரது பெற்றோர்களும்.

நம்மாழ்வாரின் தாய் தந்தையார், தாங்கள் குழந்தையைப் பெற்றும் ஒன்றும் ப்ரயோஜனப்படவில்லையே யென்று எண்ணி மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த ஸமயத்தில் நம்மாழ்வார் கோயில் பட்டர் மூலமாய், அவர்களுக்கு வர்ஷத்திற்கு ஒருதரம் குழந்தை மாதிரியாய் தர்சனம் கொடுப்பதாக வாக்களித்தார். அவர்களும் ஸந்தோஷத்துடன் கூடினவர்களாய் அப்பன் கோயிலுக்கு (ஆழ்வார் திருநகரிக்கு அக்கரையில் இரண்டு மைல்

தூரத்திலுள்ள ஒரு சிறு வைஷ்ணவ ஸ்தலம்) போய் காலத்தை கழித்து வந்தார்கள். அது முதல் நம்மாழ்வார் வர்ஷந்தோறும் குழந்தை வடிவத்துடன் தமது பெற்றோர் வஸித்து வந்த இடத்துக்குப்போய் காட்சி கொடுத்துவந்தார். இன்றைக்கும் நம்மாழ்வாரின் உத்ஸவத்தில் எட்டாவது திருநாளன்று ஆழ்வார் காலையில் அப்பன் கோயிலுக்கு எழுந்தருளுவது வழக்கம். அங்கே அந்த ஸமயத்தில் அவருக்கு பாலும், வெண்ணெயுமே நிவேதனம் செய்வது வழக்கம். பிறகு ஸாயங்காலம் ஆழ்வார் அங்கிருந்து புறப்பட்டு ஆழ்வார் திருநகரிக்கு வருவது வழக்கம்.

### 108 வைஷ்ணவ ஸ்தலதது ஸ்வாமிகளும். நம்மாழ்வாரும்.

"ஈரிருபதாஞ் சோழ மீரொன்பதாம் பாண்டி
ஓர் பதின் மூன்றுமலை நாடோ ரிரண்டாம்-சீர் நடு நா
டாறோ டீரெட்டுத் தொண்டையவ்வட நாடாறிரண்டு
கூறு திரு நாடொன்றாக் கொள்"

இதன்பொருள்:—ஈருபதாஞ் சோழம் - சோழ நாட்டிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்கள் இரண்டு இருபது (அதாவது நாற்பது), ஈரொன்பதாம் பாண்டி- பாண்டிய நாட்டிள்ள ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்கள் இரண்டு ஒன்பது (அதாவது பதினெட்டு), ஓர் பதின் மூன்றும் மலை நாடு-மலை நாட்டிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்கள் பதிமூன்று, சீர்-மேன்மை பொருந்திய, நடு நாடு-மத்ய தேசத்திலுள்ள ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத் ரங்கள், ஓரிரண்டாம் - இரண்டு, தொண்டை-தொண்

டைமான் சக்ரவர்த்தியால் அரசாளப்பட்ட நாட்டிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்கள், ஆறோடிரெட்டு - இருபத்தி இரண்டு; வட நாடு - வட நாட்டிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்கள், ஆறிரண்டு- பன்னிரண்டு, கூறு - பகவத் பக்தியில் மிகவும் ஈடுபட்ட வித்வான்களால் மிகவும் உயர்ந்ததாய் கூறப்படும், திருநாடு - மேன்மை பொருந்திய நாடாகிய பரமபதம் (ஸ்ரீவைகுண்டம்), ஒன்று ஆக - ஒன்று என்று, கொள் - அறிந்து கொள். (இப்படி மொத்தம் ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்கள் 108.)

——என்றபடி 108 வைஷ்ணவ ஸ்தலத்து பெருமாள்களும் இவருக்கு முன் தோன்றி காட்சி கொடுத்தருளினர்கள். இவர் தம்முடைய இடத்தை விட்டு வெளியில் போகவே இல்லை. இருந்தவிடத்திலிருந்தே அவர்களைக் குறித்து பாடி அருளினர்.

இவர் 35 திருப்பதிகளைப்பற்றி பாடியிருக்கிறர். அவையாவன:—

1. திருவரங்கம்.
2. திருப்பேர் நகர்.
3. திருக்குடந்தை.
4. திருவிண்ணகர்.
5. திருக்கண்ணபுரம்.
6. திருமாலிருஞ் சோலை மலை.
7. திருமோகூர்.
8. திருக்குருகூர்.
9. திருநகிரி.
10 ஸ்ரீவரமங்கை.
11. திருப்புளிங்குடி.
12. திருப்பேரை.
13. ஸ்ரீவைகுந்தம்.
14. வரகுணமுங்கை.
15. பெருங்குளம்.
16. திருக்குறுங்குடி.
17. திருக்கோவிலூர்.

18. திருவநந்தபுரம்.
19. திருவண்பரிசாரம்.
20. திருக்காட் கரை.
21. திருமூழிக்களம்.
22. திருப்புலியூர்.
23. திருச்செங்குன்னூர்
24. திருநாவாய்.
25. திருவல்ல வாழ்.
26. திருவண் வண்டூர்.
27. திருவாட்டாறு.
28. திருக்கடித்தானம்.
29. திருவாறன்விளை.
30. திருவேங்கடம்.
31. திரு அயோத்தி.
32. திருத்துவாரகை.
33. வட மதுரை.
34. திருப்பாற் கடல்.
35. பரமபதம்.

அருளிச் செயல்.

இவர் செய்த பாசுரங்கள் 1296. இவற்றுள் திருவிருத்தம் 100 பாசுரங்களுடன் கூடினது. இது ருக் வேதத்தின் ஸாரத்தை தமிழில் விளக்குகிறது. திருவாசிரியம் ஏழு பாசுரங்களுடன் கூடினது. இது யஜுர் வேதத்தின் ஸாரத்தை சொல்லுகிறது. ஸாம வேதத்தின் கருத்தை 1102 பாசுரங்களாக பாடி அருளியிருக்கிறார். அதற்கு திருவாய்மொழி யென்று பெயர். (திருவாய் மலர்ந்து அருளினது திருவாய்மொழி.) பெரிய திருவந்தாதி என்பது 87 பாசுரங்களுடன் கூடினது. அது அதர்வண வேதத்தின் கருத்தைச் சொல்லுகிறது. இவைகளை முதலில் நம்மாழ்வார் தம் சிஷ்யனான மதுரகவிக்கு உபதேசித்தார். பிறகு மற்றவர்கள் அவர் மூலமாய் அறிந்து கொண்டார்கள்.

நம்மாழ்வாரின் கொள்கை.

(1) ஈச்வரன் ஒருவர். அவரை எந்தவிதம் வேண்டுமானாலும் பூஜிக்கலாம்.

(2) அவர் இன்னாரென்று சொல்வது மிகவும் கஷ்டம்.

(3) அவருக்கு ரூபமுண்டு. ரூபமில்லை. அவர் எங்குமிருக்கிறார். ஓரிடத்திலுமில்லை நல்லது மவரே; கெட்டது மவரே.

(4) தாயுமவரே. தந்தையுமவரே. பிள்ளையு மவரே. எல்லாம் அவரே.

(5) அவரை அடைய அநேக வழிகளிருக்கின் றன. எல்லா வழிகளிலும் ப்ரபத்திவழியே (ஈச்வர னைத் தவிர வேறு எவரும் கதியில்லை யென்று சரணா கதி யடைவது) முக்யமானது. தன்னாலே ஒன்று மில்லை. ஈச்வரன் கருணையால் தான் மோக்ஷம் கிடைக்கவேண்டும். அதற்கு எவ்வளவு ஏற்பாடு செய் தாலும் மனுஷ்யனால் முடியாது. மேலும் அநேக ஜன்மங்கள் எடுத்துத் தான் கரை ஏற முடியும். இந்த ஜன்மாவிலேயே அவரை அடைய வேண்டுமானால் அவருடைய திவ்ய பாதங்களையே கதியாய் அடைய வேண்டும். வேறே ஒரு வழியுமில்லை. இது தான் வைஷ்ணவர்களின் கொள்கை.

தனியன்கள்.

இவ்வாழ்வாருக்கு அநேக தனியங்களிருக்கின் றன.

திருவிருத்தத்தின் தனியன் கிடாம்பியாச்சானல் செய்யப்பட்டது. இந்தத் தனியன் சீராமப் பிள்ளையால் செய்யப்பட்டதென்றும், ஆளவந்தாரால் செய்யப்பட்டதென்றும் சிலர் சொல்லுகிறார்கள். திருவாசிரியத்தின் தனியன் அருளாளப் பெருமாளெம்பெருமானர் செய்தது. பெரிய திருவந்தாதியின் தனியன் எம்பெருமானரால் செய்யப்பட்டது.

திருவாய்மொழிக்கு நாதமுனிகள், ஈச்வர முனிகள், சொட்டை நம்பி, அனந்தாழ்வான், பட்டர் ஆகிய ஐந்து பேர்கள் தனியன்களை செய்திருக்கிறார்கள்.

அவைகளில் ஒன்றை மட்டிலும் இங்கு கூறுவோம்.

"பக்தாம்ருதம் விச்வஜனனு மோதனம்.
ஸர்வார்த்ததம் ஸ்ரீ சடகோப வாங்மயம்
ஸஹஸ்ரசாகோப நிஷத் ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேதாஸாசரம்

இது நாதமுனிகள் செய்தது.)

பக்தாம்ருதம் - விஷ்ணுவின் பக்தர்களுக்கு அம்ருதமாயும், விச்வஜனனு மோதனம் - ப்ரபஞ்சத்திலுள்ள ஸகலமான ஜனங்களையும், ஆனந்திக்கும்படி செய்வதாயும், ஸர்வார்த்ததம் - ஸமஸ்தமான புருஷார்த்தங்களையும் (தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இந்த நான்குக்கும் நாலுவித புருஷார்த்தம் என்று பெயர்) கொடுக்கக் கூடியதாயும், ஸ்ரீ சடகோப வாங்மயம். - ஸ்ரீ மாமனுகிய சடகோபன் என்று கீர்த்தி

பெற்ற நம்மாழ்வாரின் வாக்கினால் நிறைந்துள்ளதாயும், ஸஹஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம் அநேகவேத சாகைளென்ன, உப நிஷத்துக்களென்ன, இவைகளுடன் சேர்ந்ததாயும் (அதாவது உபநிஷத்தைத் தவிர வேறே ஒன்றும் இதில் அடங்கவில்லையென்பது பொருள்), த்ராவிட வேத ஸாகரம் - தமிழ் வேதமாகிய ஸமுத்ரத்தை, நமாம்யஹம். - நான் மிகவும் ப்ரீதியுடன் நமஸ்காரம் செய்கிறேன்.

## வேறே சில விசேஷங்கள்.

இந்த ஆழ்வாரை தேவலோகத்திலுள்ள விஷ்ணு பக்தர்களெல்லாரும் வந்து தர்சனம் செய்து போனார்கள்.

யானைக்கு ஸமமான மற்ற மதங்களை அங்குசமென்ற ஈட்டியினால் இவர் ஜயித்ததினால் இவருக்கு பராங்குசர் என்ற பெயர் உண்டாயிற்று.

ஸ்வாமி தம்முடைய வகுள புஷ்பத்தினால் தொடுக்கப்பட்ட மாலையை இவருக்கு கொடுத்ததினால் இவருக்கு வகுளாபரணர் என்ற பெயருமுண்டு.

## மற்றப் பெயர்கள்.

(1) காரிமாறன் (காரியாருக்கு உலக நடவடிக்கைகளுக்கு விரோதமாய்ப் பிறந்த பிள்ளை என்று பொருள்.) (2) காரிஸூநு (ஸூநு என்றால் பிள்ளையென்று அர்த்தம்) (3) மாறன் (4) சடகோபன் (5) பராங்குசன் (6) திருவாய்மொழிப் பெருமாள் (திருவாய் மொழியை உலகத்தாருக்கு கருணையுடன்

சொன்ன ஸ்வாமி) (7) உதய பாஸ்கரர் (உதயமான ஸூர்யன்.) (8) திருநாவீறுடைய பிரான். (திரு-அழகிய, நா-நாக்கினுடைய; வீறு - சிறப்பினை; உடைய பிரான்-இயற்கையிலே அமையப்பெற்றவர்; பகவானுடைய கல்யாண குணங்களை பேசும் திறமையுடையவர் நம்மாழ்வார்.) (9) குருகைப் பிரான் (10) திருக்குருகூர் நம்பி (நம்பி என்றால் பெருமாள்) (11) தென்னரங்கன் பொன்னடி (ஸ்வாமியான விஷ்ணுவின் பாதம். இவர் தென்தேசத்தில் பிறந்தபடியால் இந்தப் பெயர் உண்டாயிற்று) (12) வகுளாபரணன் (13) அருள்மாறன்.

அருள்மாறன் - ஸகலமான ஜீவன்களுக்கும் க்ருபை செய்யக்கூடிய சடகோபன்.

இந்த ஆழ்வாரின் ஏற்றம்.

இதற்கு முன் உண்டான ஆழ்வார்கள் ஈச்வரன் கருணையால் அவதரித்தார்கள். ஆனால் அடிக்கடி அவர்களை ஈச்வரன் அவர்களுடைய வேலையைச் செய்யத் தூண்ட வேண்டியிருந்தது. இவருக்கு அப்படியொன்று மில்லாமலே, எப்பொழுதும் ஈச்வர ஞானம் மேலிட்டிருந்தபடியால் இவரே எல்லாரிலும் முக்யமானவர். இவருக்கு எல்லாரையுங் காட்டிலும் ஏற்றம் அதிகம். இவருக்கு மற்ற எல்லா ஆழ்வார்களையும் அவயவங்களாகச் சொல்வது வழக்கம். பூதத்தாழ்வார் இவருக்குத் தலை. பொய்கை ஆழ்வாரும், பேயாழ்வாரும் இரண்டு கண்கள். பெரிய ஆழ்வார் முகம். திருமழிசை ஆழ்வார் கழுத்து. குலசேகர ஆழ்வா

ரும் திருப்பாண ஆழ்வாரும் இவருக்குக் கைகள். தொண்டரடிப்பொடி ஆழ்வார் மார்பு. திருமங்கை ஆழ்வார் தொப்புள். மதுரகவி ஆழ்வார் பாதம். இப்படி இவர் எல்லா ஆழ்வார்களேயும் தமக்குள்ளே அவயவங்களாக அடக்கிக்கொண்டிருப்பதினுல், இவரே எல்லாரிலும் மிகவும் முக்யமானவர். இவர் இந்த பூலோகத்தில் 35 வர்ஷகாலம் இருந்து விட்டு கடைசியாய் தேவலோகம் அடைந்தார். அந்த ஸமயத்தில் ஆகாசத்தில் கருட பகவான் வட்டமிட்டார். தேவர்கள் பாடினுர்கள். புஷ்பம் ஆகாசத்திலிருந்து வர்ஷித்தது. இவர் விஷ்ணுவின் விசேஷ அவதாரமானதினுல், விஷ்ணுவின் பாதத்தை ஸ்ரீசடகோபம் என்று இவருடைய பேரை வைத்து இன்றைக்கும் அழைக்கிருர்கள்.

## நம்மாழ்வாரின் காலம்.

இவர் தகப்பனுரான காரி என்பவர் பாண்டிய நாட்டு அரசனின் கீழ் ஒரு உயர்ந்த உத்யோகத்திலிருந்ததாக பட்டயங்களால் தெரிகிறது. 770 கி. பியில் பராந்தக பாண்டியன் வஸித்தான். அவனுடைய மந்த்ரியின் பெயர் மாறன் காரி. ஆதலால் நம்மாழ்வார் ஸுமார் கி. பி 770 வர்ஷம் வாக்கில் பிறந்திருக்கவேண்டும். ஆனுல் மாறன் காரிக்கு ஜன்மபூமி திருக்குருங்குடிக்கு பத்து மைல் தூரத்திலுள்ள களக்காடு என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர் மட்டிலும் மேற்கு மலேகளிலுள்ள 13 விஷ்ணு ஸ்தலங்களேப்பற்றி பாடியிருக்கிருர். வேறே ஒரு ஆழ்வாரும்

அவைகளைப்பற்றி பாடினதில்லை. இந்தக் காலத்தில் கூட அந்த இடங்களுக்கு போவது மிகவும் கஷ்டம். ஒவ்வொரு இடத்திற்கும் அநேக காடுகள் மூலமாயும், மலைக் கணவாய்கள் மூலமாயும் போகவேண்டும். இந்தக் காலத்திலேயே இவ்வளவு கஷ்டமானல் முன்பு அதிக கஷ்டமாகவே இருந்திருக்கவேண்டும். ஆனல் இவர் அந்தக்காலத்து அரசர்களின் உதவியினல் இந்த மலை நாட்டு விஷ்ணு ஸ்தலங்களுக்குப் போய் பெருமாள்களை தர்சித்திருக்கலாம். இந்தக் காரணங்களைக் கொண்டு இவர் ஸுமார் கி. பி எட்டாவது நூற்ருண்டின் கடைசியிலும் ஒன்பதாவது நூற்ருண்டின் முதலிலும் வஸித்திருக்கவேண்டும் என்று சொல்லலாம்.

---

# IX. மதுரகவி ஆழ்வார்.

## திரு அவதாரம்.

இந்த ஆழ்வார் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஆழ்வார் திருநகரிக்கு ஸுமார் இரண்டு மைல் கிழக்கேயுள்ள திருக்கோளூரில் அவதரித்தார். இந்த ஊர் தாம்ப்ரபர்ணி நதிக் கரையின்மீது உள்ளது. இவர் தகப்பனர் பெயர் நாராயணர். அவருக்கு அந்த ஊர் ஸ்வாமியான வைத்தமாநிதிப் பெருமாள் கருணையால் ஒரு பிள்ளை பிறந்தது. இந்தக் குழந்தைக்கு மதுர கவி என்று பெயர். இவர் தந்தை முன் குடுமி வைத்துக்கொள்ளும் ப்ராமணர். இவர் த்வாபர யுகத்தில் 8,63,87 வதான ஈச்வர வர்ஷம், சித்திரைமீ, சுக்ல பக்ஷம், சதுர்த்தசி திதி, வெள்ளிக்கிழமை, சித்திரை நக்ஷத்ரத்தில் அவதரித்தார். இவர் தேவ கணங்களுக்கு அதிபதியான குமுதராது அம்சமும், கருடனுடைய அம்சமும் ஆவார். பத்ம புராணத்தில் இவர் பிறப்பைக் குறித்து எழுதியிருக்கிறது.

## பால்யம்.

இவர் அதிபால்யத்திலேயே நான்கு வேதங்களையும், ஆறு சாஸ்த்ரங்களையும், அறுபத்து நான்கு கலைகளையும் நன்றாய்க் கற்றுவிட்டார். இவருக்கு பாட்டில் நல்ல ஞானம் உண்டு. பாடுவது மிகவும் இனிமையாயிருக்கும். அதனல் இவருக்கு மதுரகவி

யென்று பெயர் உண்டாயிற்று. இவருக்கு விஷ்ணு பக்தி அதிகமாயிருந்தபடியால் ஸகலமான விஷ்ணு ஆலயங்களுக்கும் போய் அங்கேயுள்ள ஸ்வாமிகளை தர்சித்து வரப் புறப்பட்டார். ஊர் ஊராய்ப்போய், கடைசியாய் வடக்கேயுள்ள திருவயோத்தியை அடைந்து, ராமரையும் ஸீதா தேவியையும் தர்சனம் செய்து அங்கே சில காலம் வஸித்து வந்தார்.

நம்மாழ்வாரும் மதுர கவியும்.

பிறகு மதுரகவி நம்மாழ்வாரைக் கண்டதைப் பற்றியும், அவரிடம் சிஷ்யரானதைப் பற்றியும் 8-வது அத்யாயத்தில் விவரித்திருக்கிறோம்.

நம்மாழ்வார் இவருக்கு உபதேசித்த பாசுரங்களை இவர் எப்பொழுதும் தாளம்போட்டுப் பாடிக் கொண்டே மனப்பாடம் செய்துவந்தார். மற்றுமுள்ள விஷ்ணு பக்தர்களுக்கு அதை உபதேசம் செய்தார்.

மங்களா சாஸனம்.

இந்த ஆழ்வாரால் மங்களா சாஸனம் செய்யப்பட்டவர் நம்மாழ்வார் ஒருவரே. இவர் செய்த பாசுரங்கள் பதினொன்று. அவைகளுக்கு "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்று பெயர். அதில் தம்முடைய பக்தியை நன்றாய் வெளியிட்டிருக்கிறார்.

நம்மாழ்வார் இந்த லோகத்திலிருந்து நீங்கிய பின் 50 வர்ஷம் மதுரகவி பூலோகத்தில் வாழ்ந்திருந்தார். இவர் ஆழ்வாருக்கு ஒரு விக்ரகம் செய்து, அதை ஆழ்வார் திருநகரியில் புளியமரத்தடியில் ப்ரதிஷ்டைசெய்து, அநேக விதமான உத்ஸவங்களை யெல்

லாம் செய்து வந்தார். ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை யெல்லாம் வேதத்துக்கு ஸமமாய் அந்த உத்ஸவங்களில்பாடி வந்தார்.

மதுரை ஸங்கத்தாரும் மதுரகவியும்

இந்த உத்ஸவங்களில் நம்மாழ்வாரை வேதம் தமிழ் செய்த மாறனென்றும், மற்றும் அநேக மர்யாதைப் பெயர்களுடனும் அழைத்து வந்தார். இது சில ஸங்கப் புலவர்களுக்கு அஸூயையால் பொறுக்கவில்லை. இவருடன் சண்டைக்கு வந்து கக்ஷி கட்டினார்கள். இவருக்கு என்ன செய்வது என்று தெரியாமல், தம்முடைய குருவான ஆழ்வாரைக் குறித்து முன்னிலும் அதிகமாய்ப் பாடினார். மறுநாள் ஒரு கிழட்டு ப்ராமணர் ரூபமாய் நம்மாழ்வார் இவருக்குத் தோன்றி, பின்வரும் உபாயத்தைத் தெரிவித்தார். அதாவது, திருவாய் மொழி பத்தாம் பத்து ஐந்தாம் திருவ்வாய் மொழியில் ஈச்வரனை பக்தியுடன் எவன் பூஜிக்கிறானோ அவனுடைய விரோதிகள் தாங்களாகவே அபஜயப்படுகிறார்கள் என்று சொல்லி யிருக்கிறது. அதில் முதல் பாட்டு.

" கண்ணன் கழலிணையை
நண்ணும் மனமுடையீர் !
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே."

(பதவுரை.) கண்ணன் - கண்ணபிரானுடைய, கழல் இணையை - இரண்டு திருவடிகளையும், நண்ணும்- சேரும், மனம் உடையீர் - எண்ணம் உடையவர்களே,

எண்ணும்-நீங்கள் த்யானிப்பதற்கு ஏற்ற, திருநாமம்-பெயரானது, நாரணம்-நாராயணன் என்பது; திண்ணம் - இது உறுதி.

[பொழிப்புரை.] கண்ணபிரானுடைய இரண்டு திருவடிகளையும் சேரும் எண்ணம் உடையவர்களே! நீங்கள் த்யானிப்பதற்கு ஏற்ற பெயரானது நாராயணன் என்பது நிச்சயம்.

இதன் முதலடியாகிய "கண்ணன் கழலிணையை" என்பதை ஒரு சிறு ஓலையில் எழுதி ஸங்கத்துக்கு அனுப்பும்படி சொன்னார். இதற்கு மதுரகவியும் ஒத்துக்கொண்டு அப்படியே செய்தார். இதை அடைந்த ஸங்கப்புலவர்கள் ஸங்கப் பலகையின்மீது உட்கார்ந்துகொண்டு பாசுரம் எழுதியுள்ள ஓலையை அதன்மீது வைக்கவே, ஸங்கப் புலவர்கள் கீழே பொற்றாமரைகுளத்தில் விழுந்தார்கள். இந்த ஓலை மட்டிலும் அப்படியே யிருந்தது. இதைக்கண்டு அவர்கள் கர்வம் அடங்கி பின் வருமாறு பாடினார்கள்.

"ஈயாடுவதோ கருடற்கெதிரே
யிரவிக்கெதிர் மின்மினி யாடுவதோ
நாயோடுவதோ வுறுமிப் புலிமுன்
நரி கேசரிமுன் நடை யாடுவதோ
பேயாடுவதோ வழகூர்வசி முன்
பெருமான் வகுளாபரணனருள் கூர்ந்
தோவா துரை யாயிர மாமறையி
னொருசொற் பெறுமோ வுலகிற் கவியே."

(பதவுரை.) கருடற்கெதிரே - கருடபக்ஷிக்கு முன்னே, ஈயாடுவதோ - ஈயானது ஆடி ஜயித்து விடுமா, இரவிக்கெதிர் - ஸூர்யனுக்கு முன்னே, மின் மினி யாடுவதோ-மின்மினிப் பூச்சியானது ஆடி விளங் குமா, உறுமி - உறுமிக்கொண்டு, நாய் - நாயானது புலிமுன் - புலிக்கு முன்பாக, ஓடுவதோ - ஓடி ஜயிக் குமோ, கேசரிமுன் - ம்ருகங்களுக்கு அரசனான ஸிம் ஹத்தின்முன், நரி - நரியானது, நடை யாடுவதோ- நடந்துசெல்ல முடியுமோ, அழகு ஊர்வசி முன் - அழ குடன் கூடின தேவலோகத்து கன்னிகையான ஊர் வசி முன், பேயாடுவதோ - பேயானது ஆடி ஜயித்து விடுமா, பெருமான் - பெருமானான, வகுளாப்ரணன்- சடகோபன், அருள்கூர்ந்து - அருள் மிகுந்து, ஓவாது- என்றும் அழியாதபடி, உரை - பாடிய, ஆயிரம் மாமறையின் - ஆயிரம் பாசுரங்களாகிய, பெருமை பொருந்திய வேதத்தின், ஒருசொல் - ஒரு சொல்லு க்கு, உலகிற்கவி - உலகத்திலுள்ள கவிகளின் பாசுரங் களெல்லாம், பெறுமோ - ஙிகர் ஆகுமோ; (ஆகாது என்பது கருத்து.)

[பொழிப்புரை.] கருடபக்ஷிக்கு முன்னே, ஈயா னது ஆடி ஜயித்துவிடுமா? ஸூர்யனுக்கு முன்னே, மின்மினிப்பூச்சியானது ஆடி விளங்குமா? உறுமிக் கொண்டு நாயானது புலிக்கு முன்பாக ஓடி ஜயிக் குமோ? ம்ருகங்களுக்கு அரசனான ஸிம்ஹத்தின் முன், நரியானது நடந்து செல்ல முடியுமோ! அழ குடன் கூடின தேவலோகத்து கன்னிகையான ஊர்

வசி முன் பேயானது ஆடி ஜயித்துவிடுமோ? பெருமா ஞன சடகோபன் அருள் மிகுந்து என்றும் அழியாத படி உரைத்த ஆயிரம் பாசுரங்களாகிற பெருமை பொருந்திய தமிழ் வேதத்தின் ஒரு சொல்லுக்கு உல கத்திலுள்ள கவிகளின் பாசுரங்கள் நிகராகுமா? (ஆகாது என்பது பொருள்.)

இப்படி அநேக பாட்டுக்களால் முன்னிலும் அதி கமாய் ஆழ்வாரை ஸ்தோத்ரம் செய்து வந்தார்கள்.

தனியன்.

இவர் தனியன் ஸ்ரீமந் நாதமுனிகள் செய்தது.

"வேறொன்றும் நான் அறியேன்
வேதந் தமிழ்செய்த—
மாறன் சடகோபன் வண்குரு
கூர்—ஏறெங்கள்—
வாழ்வாமென் றேத்தும் மதுரக
வியார்—எம்மை
ஆள்வாரவரே யரண்."

எப்படி விஷ்ணுவின் பாதத்தை சடகோப னென்று அழைப்பது வழக்கமோ, அதேமாதிரி நம் மாழ்வார் பாதத்தை மதுரகவிகள் என்று அழைப்பது வழக்கம்.

மதுரகவிகள், நம்மாழ்வார் அவதரிப்பதற்கு முன் பிறந்து அவருடைய கருணையைப் பெற்று அவ ருக்குப் பிறகுகூட 50 வர்ஷ காலம் பூலோகத்திலி ருந்துவிட்டு தேவலோகம் போனார். ஆதலால் இவர் கி. பி. எட்டாவது நூற்றாண்டின் மத்தியில் பிறந்து ஒன்பதாவது நூற்றாண்டிலும் வஸித்திருக்கவேண் டும்.

## X. குலசேகர ஆழ்வார்.



முற்காலத்தில் சேரநாட்டின் ராஜதானியாகிய கோழிக்கோடு என்னும் துறைமுகப் பட்டணத்தில் 'த்ருடவ்ரதன்' என்னும் ஒரு அரசன் அரசுபுரிந்துவந்தான். அவன் காலத்தில் ராஜ்யத்திலுண்டான செழிப்பைச் சொல்லி முடியாது. அவனுக்கு வெகு காலமாய் பிள்ளை பிறக்கவேயில்லை. இதற்கு என்ன செய்யலாமென்று ஸமர்த்தர்களான அநேக வைஷ்ணவர்களைக் கேட்க அவர்கள் "ஆராதனானாம் ஸர்வேஷாம் விஷ்ணோர் ஆராதனம் பரம்; தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீயாராதனம் பரம்" என்றார்கள்.

(பதவுரை.) ஸர்வேஷாம்- எல்லாருடைய, ஆராதனானாம் - பூஜைகளுக்குள்ளும், விஷ்ணோ-விஷ்ணுவினுடைய, ஆராதனம்-பூஜையானது, பரம்-மேன்மை பொருந்தியது. தஸ்மாத்- அதைக்காட்டிலும் (விஷ்ணுவின் பூஜையைக்காட்டிலும்) பரம்-மிகவும் ச்ரத்தையுடன் கூடச்செய்யும், ததீயாராதனம்-அந்த விஷ்ணுவின் திருவடிகளைக் குறித்தே த்யானம் செய்கிற பக்தர்களாகிற ஸ்ரீவைஷ்ணவர்களை பூஜிப்பது, பரதரம் மிகவும் மேன்மையுடன் கூடினதென்று, ப்ரோக்தம்- (சாஸ்த்ரம் அறிந்தவர்களால்) சொல்லப்பட்டிருக்கிறது.

(பொழிப்புரை) எல்லாருடைய பூஜைகளிலும் விஷ்ணுவின் பூஜையானது மேன்மையுடன் கூடினது. அதைக்காட்டிலும், அந்த விஷ்ணு பக்தர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்களை மிகவும் ப்ரீதியுடன் பூஜைசெய்வது மிகவும் மேன்மையுடன் கூடினது என்று சாஸ்த்ரம் அறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

அதாவது, விஷ்ணு பக்தர்களை பூஜிக்கும்படி அரசனை வேண்டிக்கொண்டார்கள். அரசனும் முன்னிலும் மிகவும் அதிகமாய் விஷ்ணு பக்தர்களை பூஜித்து வந்தான். விஷ்ணுவின் கருணையால் ஒரு பிள்ளை பிறந்தது. அதுதான் குலசேகர ஆழ்வார். அவர் கலியுகத்தில் 28-வதான பராபவ வர்ஷம் மாசிமீ சுக்ல பக்ஷம், த்வாதசி, வெள்ளிக்கிழமை (சிலர் வ்யாழக்கிழமை என்பார்கள்) சித்ரை நக்ஷத்ரத்தில் பூமியில் அவதாரஞ்செய்தார். இந்த ஆழ்வார் கௌஸ்துப ரத்னத்தின் அம்சமாவர். இந்த ஆழ்வார் திருவஞ்சிகளமென்னும் ஸ்தலத்தில் அவதரித்தார்.

ஆழ்வாருக்கு பெயரிடுதல்.

அரசன் குழந்தை தன்னுடைய (சந்த்ர) வம்சத்துக்கு ஒரு திலகம்போல விளங்கப்போகிறானென்று எண்ணி அதற்கு "குலசேகரன்" என்று பெயரிட்டான்.

அவதாரத்தின் விசேஷம்.

ஒரு ஸமயத்தில் ப்ரம்மாவுக்கு அமராவதி பெரியதா அல்லது த்ருடவ்ருத மஹாராஜாவினால் அரசாளப்பட்டு வந்த கோழிக்கோடு பெரியதா என்ற

ஸந்தேகம் ஏற்பட்டுவிட்டது. ஒரு பெரிய தராசைக் கொண்டுவந்து இரண்டு பட்டணங்களையும் இரண்டு தராசிலும் வைக்க, கோழிக்கோட்டை வைத்த பக்கம் கீழே போயிற்று. மற்றது மேல்நோக்கிச் சென்றது. இதை உத்தேசித்து இந்த குலசேகர ஆழ்வாரை சேரநாட்டில் அவதாரஞ் செய்யும்படி ப்ரம்மா விஷ்ணுவை வேண்டிக்கொண்டார். அப்படியே விஷ்ணுவின் கருணையால் இந்த ஆழ்வார் அங்கேயே அவதரித்தார்.

### ஆழ்வாரின் இளமைப்பருவம்.

சுக்ல பக்ஷத்துச் சந்த்ரன்போல் இவர் அதிக ஒளியுடன் ப்ரகாசித்து வந்தார். இவர் கற்கவேண்டிய சாஸ்த்ரங்களை எல்லாம் அதிக பால்யத்திலேயே கற்று விட்டது மல்லாமல், யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வ்யூஹம், பத்மம், முதலியவைகளிலும் நல்ல ஸாமர்த்யத்தை அடைந்தார். இவரை இவர் தகப்பனார் இளவரசாகச் செய்தார். இளவ்ரசாக இருந்த ஸமயத்தில் சோழ நாட்டையும் பாண்டிய நாட்டையும் ஜயித்து அந்த அரசர்களை தனக்கு கப்பம் கட்டி வரும்படி செய்துவந்தார். இதைக்கண்ட தகப்பனார் இனி தாம் அரசு புரியக்கூடாதென்று எண்ணி, ராஜ்யபாரத்தை பிள்ளையினிடம் ஒப்புவித்துவிட்டு காட்டுக்குப் போய்க் கடுமையான தவம் செய்யலானார்.

### குலசேகர ஆழ்வாரின் துக்கம்.

தகப்பனார் காட்டுக்குப்போனதால் இவருக்கு வருத்தம் அதிகமாய் உண்டாயிற்று. அதைப்போக்க

வைஷ்ணவர்களைக்கொண்டு புராணங்களையும் இதிஹா ஸங்களையும் தம் முன்னிலையில் வாசிக்கச் செய்தார். அவைகளைக் கேட்டதினால் இவருக்கு தகப்பனாரைப் பற்றிய ஞாபகம் தோன்றாமல் பக்தி அதிகப்பட்டது. இதை உத்தேசித்து விஷ்வக்ஸேனர் தேவலோகத் திலிருந்து வந்து இவருக்கு பஞ்ச ஸம்ஸ்காரம்செய்து, மந்த்ரங்களையும் உபதேசித்து விட்டு தேவலோகம் போனார்.

குலசேகர ஆழ்வாரின் பக்தி.

இவருக்கு ஸ்ரீராமாவதாரக் கதைகளிலும்,க்ருஷ் ணாவதாரக் கதைகளிலும் ப்ரீதி அதிகம். ஒரு ஸமயத் தில் ஸ்ரீமத் ராமாயணம் கேட்டுக்கொண்டிருந்தார். அப்பொழுது கரதூஷணர்களை எதிர்ப்பதற்காக ஸ்ரீ ராமர் தனியாய்ச் சென்றார் என்பதை கேட்டதும், கேட்பது புராணம், கார்யம் வெகுகாலத்திற்கு முன் நடந்தது, என்பதை மறந்து, உடனே ஸைன்யத்தைச் சேர்த்துக்கொண்டு என்னாலான உதவியை நான் ஸ்வாமிக்கு செய்வேனென்று புறப்பட்டுவிட்டார். பக்கத்திலிருந்த ஜனங்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. உடனே சில வைஷ்ணவர்களை அவர் முன்னிலையில் வரும்படி மந்த்ரிகள் செய்தார்கள். அவர்களை என்ன ஸமாசாரம் என்று கேட்க, அவர் கள் ஸ்ரீராமர் ஒருவராகவே கரதூஷணர்களைக் கொன் றுவிட்டாரென்றும், அந்த வைபவத்தைக்கண்ட ஸந் தோஷத்தை அவரிடம் தெரிவிக்க வந்ததாயும் தெரி யப்படுத்தினார்கள். இதைக்கேட்ட குலசேகர ஆழ்வார் ஸந்தோஷத்துடன் ராஜ்யத்திற்குத் திரும்பினார்.

இதைக்கண்ட பக்தர்கள் ராமரின் கஷ்டங்களையெல்லாம் விட்டு விட்டு, அவருடைய நல்ல குணங்களை மட்டிலும் இவருக்கு தெரிவித்து வந்தார்கள். அப்படியிருக்க வழக்கமாய் புராணம் படிப்பவர் அயலூருக்குப்போக நேரிட்டது. அவர் பிள்ளைக்கு தம் தந்தை புராணம் வாசித்து அர்த்தம் சொல்லுவதின் ஸூக்ஷ்மம் தெரியாததால், ராவணன் ஸீதா தேவியைத் தூக்கிக்கொண்டு போனதைச் சொல்லத் தொடங்கினர். உடனே இவர் இப்பொழுதே போய் இலங்கையை அழித்து விடுகிறேனென்று புறப்பட்டார். கழுத்தளவு ஸமுத்ரத்தில் இறங்கிவிட்டார். ஸமுத்ரத்தை நீந்திக் கடந்து லங்கைக்குப் போகவேண்டுமென்பது இவர் எண்ணம். இன்னசெய்வதென்று தெரியாமல் எல்லாரும் ஸ்ரீராமனை ஸ்தோத்ரம் செய்தார்கள். இவர்கள் வேண்டுகோளுக்கிணங்கியோ, குலசேகர ஆழ்வாரை மேன்மைப் படுத்துவதற்காகவோ, ஸீதா தேவியுடனும், லக்ஷ்மணருடனும் ஸ்ரீராமர் இவருக்கு எதிரில் தோன்றினர். இதைக் கண்ட குலசேகர ஆழ்வார் மிகவும் ஆனந்தப்பட்டார்.

### குலசேகர ஆழ்வாரும் ஸ்ரீரங்கயாத்ரையும்.

இவர் ஸ்ரீரங்கத்துக்குப்போய் ஸ்வாமி தர்சனம் பண்ணிக்கொண்டு காலத்தைக் கழிக்கவேண்டுமென்று பலதடவை எண்ணினர். இவர் மந்த்ரிகள் இவர் ஸ்ரீரங்கத்திற்கு போனல் மறுபடியும் சேர தேசத்திற்கு வரமாட்டாரென்று எண்ணி, வைஷ

ணவ பக்தர்களை வரவழைத்து அவர்களை பூஜிக்கும்படிசெய்து ஸ்ரீரங்க யாத்ரையைத் தடுத்தார்கள்.

குலசேகர ஆழ்வாரும் அவர் மந்த்ரிகளும்.

அந்த வைஷ்ணவ பக்தர்கள் அரண்மனையில் எங்கும் அவர்கள் இஷ்டம்போல் போகலாம், வரலாம். இதைப்பார்த்த மந்த்ரிகளுக்கு மிகவும் பொறாமையுண்டாயிற்று. ஸ்ரீராமநவமி உத்ஸவம் நடந்தது. அதில் ஸ்வாமியின் அபிஷேகத்திற்காக ஸ்வாமியின் நகைகளையெல்லாம் பட்டர் கழற்றி வைத்திருந்தார். ஒருவன் மந்த்ரிகளின் உத்தரவுப்படி ஒரு விலையுயர்ந்தநகையையொருவருக்கும் தெரியாமல் திருடிக்கொண்டு போய்விட்டான். நகை காணாமல் போனது அரசனுக்குத் தெரிந்தது. அவர் விசனப்பட்டார். ஒரு மந்த்ரி ப்ராம்மணர்கள் எடுத்துப்போயிருக்கவேண்டுமென்று ஒரு பெரிய பொய்யைச் சொன்னான். பக்தர்கள் இந்தக் கெட்ட கார்யத்தைச் செய்யத் துணியமாட்டார்களென்று எண்ணி, தன் அபிப்ராயம் சரியா, தப்பா, என்று சோதிக்கவேண்டி ஒரு நல்லபாம்புடன் கூடின குடத்தில் குலசேகர ஆழ்வார் தம் கையை விட்டார். அவர்கள் திருடியிருந்தால் பாம்பு தன் கையைக் கடிக்குமென்று எண்ணினார். அவர் மனம் போலவே பாம்பு ஒன்றும் செய்யவில்லை. உடனே மந்த்ரி இவரிடத்தில் உண்மையைச் சொல்லி இவருடைய கால்களில் விழுந்தான். இவர் அவனை மன்னித்தாரென்று சொல்லவேண்டியதில்லை.

### கடைசி நாட்கள்.

இவருக்கு ஒரு பிள்ளை உண்டு. அவனுக்கு த்ருட வ்ரதன் என்று பெயரிட்டிருந்தார். சிலகாலம் சென்றபிறகு அவனுக்கு முடிசூட்டிவிட்டு ஸ்வாமி தர்சனத்திற்காக புறப்பட்டார்.

### மங்களா சாஸனம்.

இவர் ஏழு திருப்பதிகளைக் குறித்துப் பாடியிருக்கிறார். அவையாவன:— (1) திருவரங்கம் (2) திருக்கண்ணபுரம் (3) திருச்சித்ரகூடம் (4) திருவித்வக்கோடு (5) திருவேங்கடம் (6) திருவயோத்தி (7) திருப்பாற்கடல்.

### அருளிச்செயல்.

இவர் செய்த பாசுரங்கள் 105. இவைகளுக்கு பெருமாள் திருமொழியென்று பெயர்.

இதைத் தவிர முகுந்தமாலை என்று ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு சிறு காவ்யமும், ஸுபத்ரா தனஞ்சயம், தபஸீஸம்வரணம் என்ற இரண்டு ஸம்ஸ்க்ருத நாடகங்களையும் செய்திருக்கிறார். இவர் ஸ்ரீரங்கத்து ஸ்வாமி விஷயமாய்ப் பாடிய பாசுரங்களில் பின் கூறப்படுவது ஒன்று.

“மெய்யில்வாழ்க்கையைமெய்யெனக்கொள்ளும்-இவ்வை
யந்தனோடும் கூடுவதில்லையான்
ஐயனே ! அரங்கா ! வென்றழைக்கின்றேன்
மையல் கொண்டொழிந்தேனென்றன் மாலுக்கே.”

(பதவுரை) மெய் - நிலை, இல் - இல்லாத, வாழ்க்கையை - இந்த உலக வாழ்க்கையை, மெய்யென-மிக

வும் நிலையுடன் கூடினதென்று, கொள்ளும் - மயங்குகின்ற, இவ்வையம் தன்னோடும் - இந்த உலகத்தாரோடு, யான் - அடியேன், கூடுவதில்லை - சேருவதில்லை, ஆனால், ஐயனே - ஒருநாளும் அழியாத பெருமையுடன் கூடினவனே, அரங்கா - திருவரங்கப் பெருமாளே, என்று அழைக்கின்றேன் - என்று மிகவும் பக்தியுடன் கூப்பிடுகிறேன், என்றன் மாலுக்கே - என் தலைவனாகிய விஷ்ணுவினிடம், மையல் கொண்டொழிந்தேன் - பக்திகொண்டு அதே மயக்கத்தில் பொருந்தியே கழிக்கிறேன்.

(பொழிப்புரை) வாழ்க்கை நிலையில்லாதது என்று தெரிந்தும் அதுநிலையானது என்று எண்ணங்கொண்டு தங்கள் வாழ்நாள்களை வீண் நாள்களாக உலகத்தார்கள் கழிக்கிறார்கள். (உம்முடைய பக்தியில் மிகவும் ஈடுபட்டவனான) அடியேனோ வென்றால், அவர்களுடன் சேராமல் தேவரீருடைய அருமைத்திரு நாமங்களான ஐயா, அரங்கா முதலியவைகளை மனஸாரச் சொல்லிக்கொண்டு தன்னைத்தானே அறியாத பக்தியில் ஆழ்ந்திருக்கின்றேன். அடியேனுக்கு மிகவும் க்ருபை செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றேன்.

அவருக்கு திருப்பதி வெங்கடாசலபதி மீதுள்ள பக்தி மிகவும் அதிகம். பின் வரும் பாசுரம் அவர் பக்தியை வெளியிடும்.

"ஊனேறு செல்வத்துடற்பிறவி யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றானடிமைத்திறமல்லால்
கூனேறு சங்கமிடத்தான் தன்வேங்கடத்துக்
கோனேரி வாழும்குருகாய்ப் பிறப்பேனே."

(பதவுரை) ஏழ் ஆன் ஏறு-ஏழு ரிஷபங்களை, வென்றான்-அடக்கினவனுடைய, அடிமைத் திறமல்லால் - திருவடியே கதி என்று இருப்பதல்லாமல், ஊன் - மாம்ஸத்தையே, ஏறு-மிகுந்த, செல்வத்து - செல்வமாகவுடைய, உடல்-இந்த உடலானது, பிறவி-பல முறையும் பிறப்பதை, யான் வேண்டேன் - அடியேன் சிறிதும் விரும்பவில்லை. கூன் ஏறு சங்கம்-வளைந்தத் திருச்சங்கை, இடத்தான் தன் - தமது இடது கையில் ஏந்திக் கொண்டிருக்கும் வெங்கடாசலபதியின், வேங்கடத்து-திருப்பதியிலுள்ள,கோனேரி-கோனேரியென்று ப்ரஸித்தி உள்ள ஏரியில், வாழும் - வாழ்கிற, குருகாய் - நாரையாக, பிறப்பேனே-பிறக்க மாட்டேனோ (உம்முடைய திருவள்ளம் அறியேன்.)

(பொழிப்புரை) ஏழு ரிஷபங்களை வென்றவனான விஷ்ணுவினுடைய திவ்ய பாதங்களில் ஈடுபட்டிருப்பதைத் தவிர, மாம்ஸத்தால் மிகவும் பெருமையுடைய இந்த தேகம் பல பிறவிகளிலும் உழலுவதைச் சிறிதும் யான் ஸ்வப்னத்தில்கூட விரும்புவதில்லை. வளைந்த திருச்சங்கத்தைத் தனது இடது கையில் வைத்துக்கொண்டிருக்கும் வெங்கடாசலபதி எழுந்தருளியிருக்கும் திருப்பதியில் உள்ள கோனேரி என்ற ஏரியில் வாழ்கின்ற நாரைப் பக்ஷியாகவாகிலும் பிறக்கும்படி அடியேனுக்கு தேவரீர் க்ருபை செய்ய வேண்டும். உம்முடைய இஷ்டம் இன்னதென்று எனக்குத் தெரியவில்லையே.

நப்பின்னைப் பிராட்டியானவள் ஸ்ரீ க்ருஷ்ணபக

வானின் மனைவிகளுள் முதன்மையானவள். அவளை கல்யாணம் செய்துகொள்பவர் யாவருக்கும் அடங்காத ஏழு ரிஷபங்களை அடக்கவேண்டுமென்று, அவள் தகப்பனார் ஏற்பாடு செய்திருந்தார். பலபேர் முயன்றும் ஒன்றும் ப்ரயோஜனப்படவில்லை. கடைசியாய் ஸ்ரீ க்ருஷ்ணபகவான் அந்த ஏழு எருதுகளையும், ஏழு விதமான வடிவமெடுத்து ஜயித்தார். இதனால் அவருக்கு நப்பின்னைப் பிராட்டியாரை கல்யாணம் செய்துகொள்ளும்படி நேரிட்டது.

கோயில் வாயிற்படியாய்ப் பிறந்தால் எப்பொழுதும் ஸ்வாமி தர்சனம் பண்ணலாமென்றுகுலசேகர ஆழ்வார் பாடியபடியால், இன்றைக்கும் கோயில் உள் வாயிற் படியை "குலசேகராழ்வார் படி" என்று சொல்வது வழக்கம்.

## தனியன்.

இவருக்கு இரண்டு தனியன்கள் வழங்கிவருகின்றன. ஒன்று உடையவர் செய்தது. மற்றொன்று மணக்கால்நம்பி செய்தது.

உடையவர் செய்தது வருமாறு.

"இன்னமுதமூட்டு கேனிங்கே வாபைங்கிளியே!
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்-பொன்னின்
சிலைசேர் நுதலியர் வேள்சேரலர்கோன் எங்கள்
குலசேகரனென்றே கூறு."

## வேறு பெயர்கள்.

இவருக்கு சேரர்கோன் என்று ஒரு பெயருண்டு. இவர் தமக்கு க்ரீடத்தைக் காட்டிலும் பெருமாளின் பாதங்களையே வேண்டியபடியாலும், பெருமாளான

ஸ்ரீராமரது ஸுக துக்கங்களை தம்முடையவைகளாக பாவித்தபடியாலும், இவருக்கு "பெருமாள்" என்றே பெயர். அதனாலேயே இவர் அருளிச்செய்தவைக ளுக்கு பெருமாள் திருமொழியென்று பெயர்,

குறிப்பு.

இப்பொழுது திருவாங்கூர் ஸமஸ்தானத்தை ஆண்டுவரும் அரசர்கள் இந்த குலசேகர ஆழ்வாரின் வம்சத்தில் தோன்றினவர்கள் என்று யாவரும் பொது வாய் நம்பி வருகிறார்கள். சிலர், இவர் கொல்ல மென்ற பட்டணத்தில் பிறந்ததாகச் சொல்லுவார்கள். அது சரியல்ல. இவர் கேரளம், பாண்டியநாடு, கொங் கண தேசம், சோழதேசம் முதலியவைகளைத் தனக் குள்ளாக்கிக்கொண்டபடியால், இவருக்கு பல பெயர் கள் ஏற்பட்டிருக்கின்றன.

குலசேகர ஆழ்வாரின் காலம்.

இவர் செய்த பெருமாள் திருமொழி ஏழாவதின் கடைசிப்பாட்டு பின்வருமாறு.

"மல்லைமா நகர்க்கிறைவன்றன்னை வான்செலுத்தி
வந்தீங்கணை மாயத்து
எல்லையில் பிள்ளைசெய்வன காணுத் தெய்வத்
தேவகி புலம்பிய புலம்பல்,
சொல்லி சாவலன் மாவடி முடிமேல் கோலமாம்
குலசேகரன் சொன்ன,
நல்லிசைத் தமிழ்மாலை வல்லார்கள் நன்னுவா
ரெல்லை நாரணனுலகே."

இதிலிருந்து குலசேகர ஆழ்வார் மல்லை நகருக்கு ராஜாவான பல்லவ ராயனைச் சண்டையில் ஜயித்து விட்டு அந்த ராஜ்யத்தையும் கைக்கொண்டதாகத் தெரிகிறது. இது பட்டயங்கள் மூலமாய் கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டில் நடந்ததாகத் தெரிகிறது. ஆகவே இவர் கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டின் முற்பாதியில் இருந்திருக்கவேண்டும்.

## XI. பெரியாழ்வார்.

பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவதரித்தார். இவருடைய தகப்பனர் பெயர் முகுந்தர். தாயார் பெயர் பதுமை. அந்த ஊர்ப் பெருமாளின் பெயர் வடபத்ரசாயி. அந்தப் பெருமாளின் கருணையால் இவர் இவ்விருவருக்கும் பிள்ளையாகப் பிறந்தார். இந்த ஆழ்வாரின் தகப்பனர் முன் குடுமி ப்ராமணர். இந்த ஆழ்வார் கருடருடைய அம்சம். இவர் கலியுகத்தில் 47-வதான க்ரோதன வர்ஷம், ஆனி மாஸம், சுக்லபக்ஷம், ஏகாதசி திதி, ஞாயிற்றுக்கிழமை, ஸ்வாதி நக்ஷத்ரத்தில், பூலோகத்தில் அவதரித்தார். இவருக்கு விஷ்வக்ஸேனர் பஞ்ச ஸம்ஸ்காரத்தைச் செய்தார்.

### இவருடைய பக்தி.

இவர் தம்முடைய மார்பை ஒரு கோயிலுக்கு சரியாய் எண்ணி அதில் எப்பொழுதும் விஷ்ணு இருப்பதாக நினைத்துக்கொண்டு வந்தார். விஷ்ணுவை எப்பொழுதும் சித்தத்தில் வைத்திருந்தபடியால், அவருக்கு விஷ்ணு சித்தன் என்ற ஒரு பெயர் உண்டாயிற்று இந்த ஆழ்வாருக்கு க்ருஷ்ணவதாரத்தில் ப்ரீதி அதிகம். பகவத்கீதையை அடிக்கடி படிப்பது வழக்கம். ஈச்வரனுக்கு எவ்விதம் ஊழியத்தைச் செய்வது நல்லதென்று வெகுகாலம் யோசித்து

கடைசியாய் துளஸீ புஷ்பத்தைக்கொண்டு ஈச்வரனை பூஜிப்பதே நல்லதென்று நிச்சயித்தார். ஒரு பெரிய நந்தவனம் ஏற்படுத்தி அதில் துளஸிச் செடியை வளர்த்து அதனால் தொடுக்கப்பட்ட மாலையை ஸ்வாமிக்கு சாத்தி, ஸ்வாமியை மிகவும் பக்தியுடன் நாள் தோறும் பூஜித்து வந்தார்.

## இந்த ஆழ்வாரும் வல்லப தேவனும்.

அந்தக்காலத்தில் பாண்டியநாடு வல்லபதேவனால் அரசாளப்பட்டு வந்தது. பண்டைக்காலத்து ஹிந்து அரசர்கள் இரவில் மாறுவேஷம் போட்டுக்கொண்டு ராஜ்யத்தில் எல்லாம் சரிவர நடக்கின்றனவா என்று பார்ப்பது வழக்கம். அப்படி இந்த அரசனும் செய்துவரும் ஸமயத்தில் ஒரு வீட்டுத் திண்ணையில் ஒரு ப்ராமணன் படுத்திருக்கக்கண்டு, அவனை இன்னானென்று கேட்டு, கங்காஸ்நானம் செய்துவிட்டு ஸேதுஸ்நானம் செய்யப் போய்க்கொண்டிருக்கும் வழிப்போக்கன் என்று அறிந்தான். கங்காஸ்நானம் செய்துவிட்டு அங்கேயிருந்து கங்கா தீர்த்தத்தை ஒரு செம்பில் எடுத்துக்கொண்டு ராமேச்வரம்சென்று அந்த கங்கையை ஸமுத்ரத்தில் சேர்த்து ஸ்நானம் பண்ணுகிறவனுக்கு ஸகல பாபமும் போய்விடுமென்பது, எல்லாராலும் ஒத்துக்கொள்ளப்பட்ட ஒரு ஐதீகம். உடனே அரசனுக்கு அவன் பேசிய பேச்சிலிருந்து அவனிடத்தில் ஒரு ப்ரியம் ஏற்பட்டுவிட்டது. அவனை தனக்குத் தெரிந்த சில ந்யாயத்தைக்

கூறும்படி அரசன் கேட்டான். அதற்கு அவன் பின் வருமாறு சொன்னான்:—

> வர்ஷார்த்த மஷ்டௌப்ரயதேதமாஸாந்,
> நிசார்த்தமர்த்தம் திவஸம் யதேத
> தர்த்தந்ய ஹேதோர்வய ஸாநவவேந
> பராரஹேதோ ரிஹஜந்மநாச

(இதன் பொருள்) மழைகாலத்திற்கு வேண்டிய ஆகாரம் முதலியவைகளை மழைகால மில்லாத மற்ற எட்டு மாஸங்களில் ஸம்பாதித்து வைத்துக்கொள்ள வேண்டும்; ராத்ரிக்கு வேண்டிய ஸௌகர்யங்களை பகலிலேயே தேடி வைத்துக்கொள்ள வேண்டும்; வயோதிகத்துக்கு வேண்டிய ஸௌகர்யங்களை யெல்லாம் பால்ய வயஸிலேயே தேடி வைத்துக்கொள்ள வேண்டும். வரப்போகிற ஜன்மங்களுக்குவேண்டிய நன்மைகளை இந்த ஜன்மத்திலேயே தேடிக்கொண்டு ஜீவிக்கவேண்டும்.

இதைக் கேட்ட அரசனுக்கு பின்வருமாறு மனஸில் ஸஞ்சலம் தோன்றிற்று. "நமக்கு இந்த ஜன்மத்தில் வேண்டியது ஒன்றுமில்லை. அடுத்த ஜன்மத்துக்கு வேண்டியதற்கு என்ன செய்யலாம். பல மதங்களிருக்க எது நல்லது என்று தெரியவில்லையே." இவ்விதம் யோசித்து மறுநாள் பல வித்வான்களைக் கூப்பிட்டு தன் ஸந்தேகத்தைப் போக்கும்படி கேட்டான். அவர்களால் முடியாமல், கடைசியாய் தனது நாட்டிலுள்ள வித்வான்களையெல்லாம் குறிப்பிட்ட நேரத்தில் தன்னுடைய ராஜதானியாகிய மதுரையில் வந்து

சேர்ந்து தன்னுடைய ஸந்தேகத்தைப் போக்கும்படிக் கும், அப்படிச் செய்தால் தகுந்த இனும் கொடுப்பதா யும் ராஜ்யம் எங்கும் தெரிவிக்கச்செய்தான்.

### ஆழ்வாரும் அவர் கண்ட ஸ்வப்னமும்.

இந்த அரசன் ஆஜ்ஞைப்படி அநேக மதத்தைச் சேர்ந்தவர்கள் மதுரைக்கு வந்தார்கள். வடபத்ரசா யிப் பெருமாளும் இந்த ஆழ்வாருக்கு ஸ்வப்னததில் தோன்றி அவ்விடம் சென்று வைஷ்ணவ மதத்தை நிலைநிறுத்தும்படி தெரிவித்தார். இவர் பக்தர். ஆனால் சாஸ்த்ரங்கள் படித்தவரல்லர். ஆதலால் இவர் தம்மு டைய படிப்பு இல்லாத தன்மையை அவருக்கு எடுத் துச் சொல்லியும், அந்த ஸ்வாமி இவரை மதுரைக்குப் போகும்படி கட்டாயப்படுத்தினர். இவர் ஸ்வாமி உத்தரவை ஏற்றுக்கொண்டு மதுரைக்கு வித்வான்களு டன் கூடப்போனர்.

### மதுரை ஸபையும் இவரும்.

ஸ்வாமியின் பெயரைச் சொல்லிக்கொண்டே இவர் அந்த வித்வான்களுடன் கூடின ஸபைக்குப் போனர். அங்கேயிருந்த ராஜகுருவான செல்வநம்பி முதலியவர்களுக்கு இவரைப் பார்த்தமாத்ரத்தில் இவ ரிடத்தில் விசேஷமான பக்தியும் மர்யாதையும் உண் டாயிற்று. அரசனிருக்கும் ஸிம்மாஸனத்தின் பக் கத்தில் ஒரு விலையுயர்ந்த ஸிம்மாஸனம் அமைக்கப்பட் டிருந்தது. அதற்கு எதிரில் ஒரு அலங்காரம் செய் யப்பட்ட கழியின் உச்சியில் ஒரு விலையுயர்ந்த பீதாம்

பரத்தில், அரசன் இனும் கொடுப்பதாய்ச் சொன்ன பணம் கட்டப்பட்டிருந்தது. இவரை அங்கிருந்தவர்கள் எதிர்கொண்டு அழைத்து அந்த ஸிம்மாஸனத்தில் உட்காரும்படி செய்துவிட்டார்கள். மற்ற வித்வான்களுக்குக் கோபம் வரவே சண்டை உண்டாயிற்று. அப்பொழுது இவர் ஈச்வரன் கருணையால் பலவித சாஸ்த்ரங்களையும் வேதங்களையும் எடுத்துக் காட்டி, வைஷ்ணவமதம் மிகவும் மேன்மையானதென்றும், விஷ்ணுபக்தி செய்பவர்களுக்கு ஒருநாளும் குறைவு வராதென்றும் தெரிவித்தார். இதைக்கண்ட எல்லா வித்வான்களும் கோபத்தை விட்டுவிட்டு இவருடைய சிஷ்யர்களாக வேண்டுமென்று, இவர் திருவடிகளைத் தொழுதார்கள். அந்த ஸமயத்தில் ஈச்வர கருணையால் தூண்கூட வளைந்து இவர் அருகில் நின்றது. இவர் அரசன் உத்தரவுப்படி அந்தப் பணப்பையை அறுத்து எடுத்துக்கொண்டார். ஆதலால் இவருக்கு “கிழியறுத்தான்” என்று பெயர் உண்டாயிற்று. அங்கே உள்ள வித்வான்களுக்குத் தலைவராய் விளங்கிபபடியால் இவருக்கு “பட்டர்பிரான்” என்ற ஒரு பெயரும் உண்டு. வேண்டிய வேத வாக்யங்களை ஸமயத்தில் தப்பாமல் உபயோகித்ததால் இவருக்கு “வில்லிபுத்தூர் வேதக்கோன்” என்றும் பெயர் உண்டாயிற்று.

### இந்த ஆழ்வாரும் விஷ்ணுவும்.

வித்வான்கள் கூட்டத்தில் இவ்வளவு ஜயம் அடைந்த இவரை தெருக்கள் வழியாய் ஊர்வலம்

வரும்படி ஏற்பாடு செய்தார்கள். அநேகவித வாத்யங்களும் வேதங்களும் முழங்கின. இவரோ ஒன்றையும் கவனியாமல் ஸ்வாமியை எண்ணிக்கொண்டே சென்றார். விஷ்ணு, வைகுண்டத்திலிருந்து அரசன் பட்டத்து யானைமீது இவர் ஊர்கோலம் வருவதைப் பார்க்க வந்தார். இவர் ஸ்வாமி இவ்வளவு தூரம் கஷ்டப்பட்டு வந்தாரே, இவருக்கு கஷ்டம் ஏற்படக்கூடாதே யென்று பயந்து அதற்காகத் திருப்பல்லாண்டைப் (பத்து பாசுரத்தை) பாடி அருளினர்.

### இவரும் மற்ற ஆழ்வார்களும்.

மற்ற ஆழ்வார்கள் தங்கள் வாழ்நாட்களை ஈச்வரன் உத்தரவுப்படி கழித்தார்கள். இவரோ பெருமாளுக்கு கஷ்டம் ஒன்றும் வரக்கூடாதேயென்று பெருமாளை இவர் காப்பாற்றினர். மற்ற ஆழ்வார்களைப் பெருமாள் ரக்ஷித்தார். இவர் பெருமாளை ரக்ஷித்தார். ஆதலால் இவருக்கு "பெரிய ஆழ்வார்" என்று பெயர்.

### கடைசி நாட்கள்.

மதுரையிலிருந்து ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு வந்ததும், மறுபடியும் திருத்துழாய் (துளசி)த் தோட்டத்தைச் சரிப்படுத்தி, ஸ்வாமி கைங்கர்யங்களை செய்து வந்தார். அந்தத் தோட்டத்தில் ஒரு பெண் அயோநிஜையாய்ப் பிறந்தாள். அவளை இவர் தம் பெண்ணாக நினைத்து வேண்டியபடி காப்பாற்றி வந்தார். அவள் திருநாமம் ஆண்டாள் என்பது. இதைப்பற்றிப் பின்னல் தெரிவிப்போம். மதுரையிலிருந்து

கொண்டுவந்த பணத்தினாலும், வல்லபதேவன் ஒத்தாசையாலும் வடபத்ரசாயி கோயிலுக்கு ஒரு பெரிய கோபுரத்தைக் கட்டிவைத்தார். 85-வர்ஷ காலம் இவர் பூலோகத்தில் வாழ்ந்திருந்தார்.

### மங்களா சாஸனம்.

இந்த ஆழ்வார் இருபது திருப்பதிப் பெருமாள்கள் விஷயமாய் பாட்டுக்களைப் பாடியிருக்கிறார். அவை யாவன:—

(1) திருவரங்கம் (2) திருவெள்ளறை (3) திருப்பேர்நகர் (4) திருக்குடந்தை (5) திருக்கண்ணபுரம் (6) திருச்சித்ரகூடம் (7) திருமாலிருஞ்சோலைமலை (8) திருக்கோஷ்டியூர் (9) ஸ்ரீ வில்லிபுத்தூர் (10) திருக்குறுங்குடி (11) திருவேங்கடம் (12) திருவயோத்தி (13) சாளக்ராமம் (14) பதரிகாச்ரமம் (15) ப்ரயாகை (16) திருத்வாரகை (17) வடமதுரை (18) கோகுலம் (19) திருப்பாற்கடல் (20) பரமபதம்.

### அருளிச் செயல்.

இந்த ஆழ்வார் 473-பாசுரங்களை அருளிச்செய்தார். அவைகளுக்கு பெரியாழ்வார் திருமொழி யென்று பெயர். அதில் அநேக பாசுரங்கள் பாகவத ஸாரத்தைக் கூறுகின்றன. இதனால் இவருக்கு க்ருஷ்ணாவதாரத்தில் உள்ள ப்ரியம் வெளிப்படும்.

### தனியன்.

இவருடைய தனியன் பட்டரால் அருளிச் செய்யப்பட்டது.

"மின்னார் தடமதிள் சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம்-முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம்-
கீழ்மையினிற் சேரும் வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.
பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்-
றீண்டிய சங்கமெடுத்தோத வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பத்து.

பெரியாழ்வாரின் காலம்.

இவர் செய்த பெரியாழ்வார் திருமொழி 4-ம் பத்து இரண்டாம் திருமொழி 7-ம் பாட்டில் பின்வருமாறு பாடியிருக்கிறார்.

கொன்னவிற் கூர்வேல் கோன்
நெடுமாறன் தென்கூடல் கோன்
தென்னன் கொண்டாடும் தென்
திருமாலிருஞ்சோலையே"

இங்கே சொல்லப்பட்ட பாண்டிய அரசன் வல்லபராயனென்றும், இவன் வரகுண பாண்டியனின் பிள்ளை யென்றும், இவன் கி.பி. ஒன்பதாவது நூற்றுண்டில் இருந்ததாகத் தெரிகிறதென்றும் சரித்ரம் வல்லோர் சொல்கிறார்கள். ஆதலால் இவ்வாழ்வார் கி. பி. ஒன்பதாவது நூற்றுண்டின் ஆரம்பத்திலேயோ அல்லது கி. பி. எட்டாவது நூற்றுண்டின் கடைசியிலேயோ இருந்திருக்கவேண்டும்.

---

# XII. ஆண்டாள்.



பெரியாழ்வார் விஷ்ணுவின் பூஜைக்காக துளஸித் தோட்டம் ஒன்றைப் பரிபாலித்து வந்தாரென்றும், அதிலிருந்து ஒரு பெண் அயோநிஜையாய் அவதாரஞ் செய்தாளென்றும் சொன்னோம். இவள் விஷ்ணுவின் பத்னியாகிய ஸ்ரீ தேவியுடையவும் பூதேவியினுடையவும் அம்சம். இவள் கலியுகத்தில் 98-வதான நளவர்ஷம், ஆடிமாஸம், சுக்லபக்ஷம், சதுர்த்தசி, செவ்வாய்க்கிழமை, பூர நக்ஷத்ரம், துலா லக்னம் கூடின தினத்தில் பூமியிலிருந்து இந்த லோகத்தில் தோன்றினாள். இவள் மிகவும் அழகாய் விளங்கினாள். இவளை பெரிய ஆழ்வார் தம்பெண்ணாக எண்ணி வளர்த்துவந்தார். இவளுக்கு அவர் கோதை யென்று பெயரிட்டார். இவள் பால்யமுதல் ஈச்வரனிடத்திலேயே பக்தியைச் செலுத்தி வந்தாள். இவளுக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களை பெரியாழ்வாரே செய்தார்.

ஆண்டாளின் ஜுளைப் பருவம்.

இவள் பெரியாழ்வாரின் கருணையால் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்துவந்தாள். இவளுக்கு நிமிஷத்திற்கு ஒரு ஆடை ஆபரணம் போட்டுக்கொள்வதும், தன்னுடைய அழகை கண்ணாடியில் சரியாய்ப் பார்த்துக்கொள்ளுவதும்

உடனே ஸ்வாமியினிடம் தன் அழகைக்காட்டவேண்டும் என்ற எண்ணத்துடன் அடிக்கடி வடபத்ரசாயி கோயிலுக்குப் போவதும் வழக்கமாயிருந்தன. இவள் தனக்குத்தகுந்த புருஷன் பெருமாளைத்தவிர வேறே ஒருவருமில்லை என்றும், அவரையே தான் கல்யாணம் செய்துகொள்ளவேண்டுமென்றும் அடிக்கடி தனக்குள்ளே எண்ணிக்கொள்வது வழக்கம். பெரிய ஆழ்வார் ஸ்வாமிக்காகச் செய்த துளஸிமாலையை வீட்டில் வைத்துவிட்டு வெளியே போனதும், தான் எடுத்து சூட்டிக்கொண்டு தான் அழகாயிருப்பதைக் கண்ணுடியில் பார்த்து ஸந்தோஷப்படுவது வழக்கம். தகப்பனுர் வரும் ஸமயத்தில் மறுபடியும் அவருக்குத் தெரியாமல் மாலையை குடலையில் வைத்து விடுவாள். அதை ஒன்றும் அறியாமல் ஸ்வாமிக்கு எடுத்துக் கொண்டு போய் அவர் சாத்துவது வழக்கம். பெருமாளும் அதை ப்ரீதியுடன் அங்கீகரித்துவந்தார். இப்படி தினந்தோறும் நடந்துவந்தது. ஒரு நாள் பெரியாழ்வார் வெளியிலிருந்து அதிசீக்ரம் திரும்பிவந்து பார்க்கவே, தம் பெண் மாலையை தலையில் வைத்துக் கொண்டிருந்தாள். உடனே அவளை கோபித்துக் கொண்டு அன்றையதினம் ஸ்வாமிக்கு பாலை சாத்த முடியவில்லையே என்று மிகவும் வருத்தப்பட்டார். அன்றைய இரவு பெருமாள் இவர் ஸ்வப்னத்தில் தோன்றி இவள் சூட்டிக்கொண்ட மாலையையே தனக்குக் கொண்டுவரும்படிக்கும், அதனுல் மாலையானது மிகவும் மணத்துடன் கூடியதாக ஆயிற்று என்

றும் சொல்லி மறைந்துவிட்டார். உடனே ஆழ்வார் எழுந்திருந்து தன் மகளை லக்ஷ்மிதேவி யென்றே எண்ணி மிகவும் ஸந்தோஷத்துடன் தாம் கண்ட கனவை தன் பெண்ணிடம் தெரிவித்தார். லக்ஷ்மி தேவி மாதிரி இவளும் எல்லாரையும் ஆண்டுவரும் சக்தியுள்ளவளென்று எண்ணி இவளுக்கு "ஆண்டாள்" என்றும் பெயரிட்டார். விஷ்ணுவுக்கு ஏற்ற மாலையை தான் முதல் முதலில் தலையில் சூட்டிக் கொண்டு பிறகு அவருக்கு அனுப்பியபடியால் அவளுக்கு "சூடிக்கொடுத்த நாச்சியார்" என்றும் பெயரிட்டார்.

## ஆண்டாளின் ஸ்வயம்வரம்.

இவளுக்குத் தகுந்த வயஸு வந்ததும் தன்னுடைய காதலை மனஸில் அடக்கி வைத்துக்கொள்ள முடியவில்லை. இவள் மனஸில் பெருமாளைத் தவிர வேறே தகுந்த புருஷன் தனக்கு இல்லை யென்று எண்ணியிருந்தாள். இவள் தன்னுடைய காதலை "திருப்பாவை", "நாச்சியார் திருமொழி" ஆகிய இரண்டாலும் பெருமாள் ஸன்னிதியில் பாட்டுமூலமாய்த் தெரிவித்தாள். ஸ்வாமி இவள் தகப்பனருக்கு கனவில் தோன்றி இவளுடைய ஸ்வயம்வரத்திற்கு ஏற்பாடு செய்யும்படி உத்தரவு கொடுத்தார். பெரியாழ்வாரும் இவளை மறுநாள் கேட்க, இவள் இஷ்டப்படி அவர் 108-திருப்பதி ஸ்வாமிகளையும் பற்றி ஒவ்வொன்றாகச் சொல்லிக்கொண்டுவந்தார். ஸ்ரீ ரங்கத்துப்பெருமாளான ஸ்ரீரங்கநாதன் வைபவத்தைக் கேட்

டதும் இவளுக்கு மயிர்க்கூச்சலும், முகமலர்ச்சியும், ஆனந்தமும் உண்டாயின. எப்படி ஸ்ரீ ரங்கநாதனை மாப்பிள்ளையாய் அடைவது என்று பெரியாழ்வார் யோசித்தார்.

## ஆண்டாளுக்கும் ஸ்ரீ ரங்கநாதனுக்கும் கல்யாணம்.

ஸ்ரீ ரங்கநாதனுடைய கோயில் அதிகாரிகளுக்கு ஸ்வாமி அவர்களுடைய ஸ்வப்னத்தில் தோன்றி ஸ்ரீ வில்லிபுத்தூருக்குப் போய் தகுந்த மர்யாதையுடன் ஆண்டாளை அழைத்துவரும்படி உத்தரவு கொடுத்தார். பெரியாழ்வாருக்கு ஸ்வப்னத்தில் ஆண்டாளை தன்னுடைய ஸந்நிதிக்குக் கூட்டிக்கொண்டு வரும்படி உத்தரவு கொடுத்தார். வல்லபதேவனும் மிகவும் உத்ஸாகத்துடன் தன்னுடைய ஸைன்யத்துடன் ஸ்ரீ வில்லிபுத்தூர் வந்து சேர்ந்தான். மிகவும் மர்யாதையுடன் ஒரு விலையுயர்ந்த மகாதண்டிகை மீது ஆண்டாளை வைத்து அநேக வைபவத்துடனும், வாத்ய கோஷத்துடனும் ஸ்ரீரங்கத்துக்கு அழைத்துவந்தார். கோயிலில் ஸ்வாமி ஸன்னதிக்குப் போனதும் ஆண்டாளும் ஸ்வாமியும் ஒன்று சேர்ந்து விட்டார்கள். ஆண்டாளைக் காணவில்லை. உடனே எல்லாரும் அந்த வைபவத்தைக் கண்டு மிகவும் ஆச்சர்யப்பட்டு ஊர் போய்ச் சேர்ந்தார்கள்.

## மங்களா சாஸனம்.

ஆண்டாள் ஒன்பது திருப்பதி பெருமாள்கள் விஷயமாய் பாடியிருக்கிறாள். அவையாவன:—(1) ஸ்ரீ

ரங்கம் (2) திருக்கண்ணபுரம் (3) திருமாலிருஞ்சோலை மலை (4) ஸ்ரீ வில்லிபுத்தூர் (5) திருப்பதி (6)த்வாரகை (7) வடமதுரை (8) கோகுலம் (9) திருப்பாற்கடல்.



# XIII. தொண்டரடிப்பொடியாழ்வார்.

இந்த ஆழ்வார் திருக்குடந்தை (கும்பகோணம்) க்கு ஸமீபத்திலுள்ள திருமண்டங்குடி யென்னும் திருப்பதியில் வைஜயந்தி என்று சொல்லப்பட்ட வனமாலையின் அம்சமாய் அவதரித்தார். இவர் கலியுகத்தில் 268 வதான பராபவ வர்ஷம் மார்கழிமீ க்ருஷ்ணபக்ஷம், சதுர்த்தசி, செவ்வாய்க்கிழமை, கேட்டை நக்ஷத்ரம் கூடின சுபதினத்தில் பூலோகத்தில் அவதரித்தார். இவர் தகப்பனூர் பெயர் ஸ்ரீவைஷ்ணவ சோழியர். இவர் முன் குடுமிவைத்துக் கொள்ளும் ப்ராமணர். இந்த ஆழ்வாருக்கு இவர் தகப்பனூர் விப்ர நாராயணனென்று பெயரிட்டார். இவருக்கு வேண்டிய சாஸ்த்ரங்களையும் வேதங்களையும் தானே கற்பித்து வந்தார். இவருடைய பக்தியையும், சாஸ்த்ர அறிவையும் பார்த்து விஷ்வக்ஸேனர், நேராக தேவலோகத்திலிருந்து வந்து பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்துவிட்டு தேவலோகம் போனூர்.

### இவருடைய பக்தி.

இவருக்கு கல்யாணம் செய்துகொண்டு இல்லறத்தில் வாழ்நாளைக் கழிக்க மனம் வராமல் ப்ரம்மச்சாரியாகவே இருந்துவிட எண்ணி 108 திருப்பதிப் பெருமாள்களையும் ஸேவித்துவரப் புறப்பட்டார். முதல்

முதலில் ஸ்ரீரங்கத்திற்குப் போனார். அந்தப் பெரு மாளை ஸேவித்ததின் பின் வேறே ஒரு பெருமாளையும் பற்றிய ஞாபகம் அவருக்கு வரவேயில்லை. அவருக்கு வேண்டிய பூஜைக்காக ஒரு பெரிய நந்தவனத்தை ஏற்படுத்தி, அநேக புஷ்பங்களை அங்கேவைத்து வளர்த்து வந்தார். தேவலோகத்திலுள்ள உத்யான வனங்களைக் காட்டிலும் மிகவும் செழிப்பான அந்தத் தோட்டத்தில் அதிக வாஸனையுடன் கூடிய அநேக வித புஷ்பங்களைப் பயிர்செய்து, அவைகளை மாலை களாய்க் கட்டி, தானே ஸ்வாமிக்கு சாத்தி, மனங் குளிர ஸ்வாமியை தர்சனம் செய்து வந்தார். இந்த ஆனந்தம் பெரியதா யிருந்ததால் அன்ன ஆகாரங்க ளில் இச்சை கொள்ளாமல், பசித்த ஸமயத்தில் மாத் ரம் சில விஷ்ணு பக்தர்கள் வீடுகளில் பிக்ஷை எடு த்து தேகத்தைக் காப்பாற்றி வந்தார்.

### இந்த ஆழ்வாரும் தேவதேவியும்.

திருச்சினப்பள்ளிக்கு மேற்கே ஸுமார் ஒரு மைல் தூரத்தில் உறையூர் என்றவொரு வைஷ்ணவ ஸ்தலமுண்டு. அதற்கு நிசுளாபுரி யென்ற ஒரு பெய ருமுண்டு. அது தான் அந்தக் காலத்தில் சோழநாட் டின் தலை நகராக விளங்கிற்று. அந்தக் காலத்தில் அர சாண்டு வந்த ஓர் அரசன் ஸ்த்ரீகளைக் கண்டுகளிப்ப தும் அவர்களுடைய ஸுகங்களில் ஈடுபட்டு அவர் களுக்கு ஏராளமாய்ப் பணம் கொடுப்பதுமாயிருந் தான். அந்த ஊருக்குப் பக்கத்தில் இரண்டுமைல் தூரத்தில் திருக்கரம்பனூர் என்றும் உத்தமர் கோ

யில் என்றும் பெயருடன் கூடின ஒரு வைஷ்ணவ ஸ்தலமுண்டு. அங்கே ஒருவரையும் ஈடு சொல்லக் கூடாத அழகுடன் கூடின் ஸ்த்ரீ ஒருத்தி இருந்தாள். அவள் தான் தேவதேவி. தேவலோகத்தி லுண் டான பெண்களுக்கெல்லாம் தேவியாக விளங்கக்கூடிய அழகுடன் கூடியதால் அவளுக்கு அந்தப் பெயர் உண்டாயிற்று. அவள் அந்த அரசனிடம் போய் அவனைத் தன் வலைக்குள் சிக்கும்படி செய்து, அவ னிட மிருந்து வேண்டிய பணத்தை ஸம்பாதித்துக் கொண்டு, மறுபடியும் ஊருக்குப்போனாள். இந்த நந்த வனத்தின் அழகைப்பார்த்ததும் அவளுக்கு அந்த நந்தவனத்தின் புஷ்பங்களை அனுபவிப்பவனை தானும் அடையவேண்டு மென்று மனஸில் தீர்மானித்துக் கொண்டாள். பாத்தி கொத்திக் கொண்டிருந்த ஆழ் வார் முன்னிலையில் போய் தன்னாலானமட்டிலும் அவரை வசப்படுத்தப் பார்த்தாள். ஒன்றும் முடிய வில்லை. அவளுடன் வந்த அவள் தமக்கை, அவர் பக்தர் என்றும், அவரைக் கெடுக்க முயலுவதில் ப்ரயோஜனமில்லை யென்றும், பலவாறு சொல்லியும் தங்கை கேட்கவில்லை. தங்கையை அவள் மனம்போல் விட்டு விட்டு, தோழிமார்களும் தமக்கையும் ஊர் போய்விட்டார்கள். இவள் ஆடை ஆபரணங்களை தமக்கையிடம் கொடுத்து அனுப்பிவிட்டாள். உட னே ஒரு காவிப்புடவையைத் தறித்துக்கொண்டு மறுபடியும் அவர் முன்னிலையில்ப் போய் விழுந்து விழுந்து நமஸ்காரஞ் செய்தாள். யார் என்று ஆழ்

வார் கேட்க, அவள் பின் வருமாறு கபடமாய் பதில் சொன்னாள்.

"ஸ்வாமி! என் தாயார் ஒரு வேசி. முன் ஜன்மாவில் செய்த பாபத்தினால் அவளுக்கு நான் பெண்ணாகப் பிறந்தேன். வேசித்தொழிலைச் செய்ய எனக்கு மனமில்லை யென்று என் தாயிடம் சொல்ல, அவள் என்னை வீட்டைவிட்டுத் துரத்திவிட்டாள். நீர்செய்து வரும் செயல்களைகேட்டு உமக்கு ஊழியஞ்செய்ய வந்திருக்கிறேன். பாத்தி பிடிக்கிறேன். ஜலம் பாய்ச்சுகிறேன். களை பிடுங்குவேன். பூப்பறிப்பேன். மாலை கட்டுவேன். சொன்ன வேலையைச் செய்து உமக்கு அடிமையாய் இருக்க எனக்கு உத்தரவு அளிக்க வேண்டும்." இதை எல்லாம் நிஜம் என்று ஆழ்வார் எண்ணி அவளை அங்கேயே இருக்கச் சொன்னார். தான் சாப்பிட்ட மீதத்தை அவளுக்குக் கொடுக்க, இருவரும் வேலையைச் செய்து வந்தார்கள். ஒரு நாள் நல்ல மழை பெய்தது. ஆழ்வார் ஒரு சிறு குடிசைக்குள் ஒதுங்கி நின்றார். தேவதேவியோ அந்த மழையைக்கூட கவனியாமல் நனைந்துகொண்டு வேலையைச் செய்துவிட்டு, நனைந்து கொண்டே இவர் இருக்கும் குடிசைக்குப்போனாள். இவருக்கு அவளிடத்தில் மிகவும் இரக்கம் தோன்றி, தன் வேஷ்டியினால் அவளைத் துடைத்தார். தேவ தேவி செய்த லீலைகளாலும் பாசாங்குகளாலும், இவர்களுக்கு ஸ்நேக ஸம்பந்தம் ஏற்பட்டு விட்டது. ஆழ்வாருக்கு உடனே அதில் ஞாபகம் சென்றது. ஈச்வரனுக்குச் செய்துவந்த ஊழி

யத்தை மறந்து விட்டார். தேவதேவியின் நிழல் போல அவளை ஆழ்வார் பின் தொடர்ந்து கொண்டே சென்றார். அவள் தான் நினைத்த கார்யம் ஆய் விட்டதென்று எண்ணி, இவரை கவனியாமல் தன் வீட்டுக்குப் போய் இவரை உள்ளே வராதபடி வெளியில் துரத்திவிட்டாள்.

ஆழ்வாரும் ஸ்ரீரங்கத்துப் பெருமாளும்.

இதைக்கண்ட ரங்கநாதன் ஒரு மனித வேஷம் போட்டுக்கொண்டு, தன்னுடைய கோயிலிலுள்ள ஒரு தங்கக் கிண்ணத்தை எடுத்துக்கொண்டு, அவள் வீட்டுக்குப்போனார். அவளைக்கண்டு அந்தக் கிண்ணத்தை விப்ர நாராயணனென ஆழ்வார் கொடுத்ததாகத் தெரிவிக்க, அவள் மிகவும் ஸந்தோஷத்துடன் அவரை உள்ளே வரும்படி சொன்னாள். மனிதவேஷம் பூண்டிருந்த ஸ்வாமி ஆழ்வாரிடம் போய், தேவதேவி அவரை உடனே அழைப்பதாய்த் தெரிவித்துவிட்டு, கோயிலுக்குப் போனார். இருவரும் உல்லாஸமாயிருந்தார்கள். மறுநாள் கோயிலில் தங்கக்கிண்ணத்தைக் காணாததால் மிகவும் குழப்பம் உண்டாயிற்று. இவள் வீட்டிலிருப்பதாய் துப்புத் தெரிந்து விசாரிக்க, தேவதேவி தப்பித்துக் கொண்டாள். விப்ரநாராயணர் ஜெயிலில் போடப்பட்டார். அப்பொழுது இவருக்கு தான் செய்த தப்பிதங்களெல்லாம் நன்றாய் விளங்கின. உடனே ஸ்வாமியைக் குறித்து ஸ்தோஸ்த்ரம் செய்தார். அவ்விடத்து அரசனுக்கு

ஸ்வாமி கனவில் தோன்றி இவரை விடுவிக்கும்படி தெரிவிக்க, விப்ரநாராயணர் உடனே ஜெயிலிலிருந்து விடுவிக்கப்பட்டார். இவருக்குக் கோயிலுக்குள்போக பயம் அதிகமாயிருந்தது. உடனே அங்கே இருந்த தொண்டர்களை (வைஷ்ணவ பக்தர்களை) எல்லாம் தனக்கு ப்ராயச்சித்தம் என்னவென்று கேட்க, அவர்கள் இவரை வைஷ்ணவ பக்தர்களை பூஜை செய்யும்படி தெரிவித்தார்கள். இவரும் அப்படியே செய்து வந்தார். இவர் தொண்டர்களின் (வைஷ்ண வபக்தர்களின்) பாதங்களிலுள்ள தூள்களுக்கு ஸம மாய் தன்னை யெண்ணினபடியால் இவருக்கு அது முதல் "தொண்டரடிப் பொடி ஆழ்வார்" என்ற பெயர் உண்டாயிற்று. ரங்கநாதனும் இவருக்கு தன்னுடைய நிஜ ரூபத்தைக்காட்டி, இவரைத்தனக்கு இடைவிடாத பக்தியையும் பூஜையையும் முன் மாதிரி செய்யும்படி உத்தரவு செய்தார்.

### மங்களா சாஸனம்.

இந்த ஆழ்வாரால் மங்களா சாஸனம் செய்யப் பட்ட ஸ்தலங்கள் மூன்று. அவையாவன:- (1) ஸ்ரீரங் கம் (2) திருவயோத்தி (3) திருப்பாற்கடல்.

### அருளிச்செயல்.

இவர்செய்த பாசுரங்கள் 55. அவைகளில் திருப் பள்ளி எழுச்சி 10 பாட்டு. திருமாலை 45. திருமாலை என்பது மிகவும் அர்த்த புஷ்டியுள்ளது. அதிலிருந்து இரண்டு பாசுரங்களை மட்டிலும் இங்கு தருவோம்.

"பச்சைமா மலைபோல் மேனிப்
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம்
கொழுந்தே! யென்னும்
இச்சுவைதவிர-யான்போ
யிந்திர லோகமாளும்-
அச்சுவை பெறினும் வேண்டே
னரங்கமா நகருளானே.!"

(இதன் பொருள்.) அரங்கமாநகர் உளானே - ஸ்ரீரங்கம் என்னும் பெரிய நகரில் உள்ள பெருமாளே! பச்சை - பசுமை நிறம் தங்கிய, மா - பெரிய, மலைபோல் - மலையை யொத்த, மேனி - திருவுருவத்தையும், பவள வாய்-பவளத்தை ஒத்த சிவந்த திருவாயையும், கமலம் செம்கண் - செந்தாமரையை ஒத்த சிவந்த திருக்கண்களையும் (உடைய) அச்சுதா - அழிவில்லாதவனே! அமரர் ஏறே - தேவ சிங்கமே! ஆயர் தம் கொழுந்தே-இடையர் குலத்தாரில் சிறந்தவனே! என்னும் - என்று தங்களைத் துதிக்கும், இச்சுவை தவிர-இந்த இன்பத்தை யொழித்து, யான்-அடியேன் போய் - போய், இந்த்ரலோகம் ஆளும் - இந்த்ர உலகத்தை ஆளுகின்ற, அச்சுவை பெறினும்-அந்த இன்பத்தைப் பெறுவதா யிருப்பினும், வேண்டேன் - நான் விரும்பமாட்டேன்.

(அதாவது) ஸ்ரீரங்கம் என்ற ப்ரஸித்திபெற்ற க்ஷேத்ரத்திலுள்ள பெருமாளே! பசுமை நிறத்துடன் கூடினதும், மிகவும் பெரியதான மலையை யொத்த திருவுருவத்துடன் கூடினதும், பவளத்தைப்போ

லுள்ள மிகவும் சிவந்த திருவாயுடன் கூடினதும், செந்தாமரை புஷ்பத்துக்கு ஒப்பான திருக்கண்களுடன் கூடினதுமான அழிவில்லாதவனே! எப்படி ஸிம்மமானது பூலோகத்திலுண்டான ம்ருகங்களுக் கெல்லாம் அரசனோ, அதே மாதிரி தேவலோகத்திலுள்ளவர்களுக் கெல்லாம் அரசே! கோகுலத்தில் மிகவும் உத்க்ருஷ்டமான இடைய வம்சத்தில் பிறந்தவனே! உன்னை என் மனம் ஆற ஸ்துதிசெய்யும் ஸுகத்தைத் தவிர நான் இந்த்ரலோகத்தை ஆளுகிற அந்த இன்பத்தைக்கூட விரும்பவே மாட்டேன்.

வேதநூற் பிராயம் நூறு மனிதர்தாம்
புகுவரேலும்
பாதியு முறங்கிப் போகும்! நின்றதிற்
பதினையாண்டு
பேதை பாலகனதாகும் பிணி
பசிமூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டே னரங்கமா
நகருளானே!

(இதன்பொருள்.) அரங்கமாநகர் உளானே - திருவரங்கம் என்னும் பெரிய ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளே! வேதநூல் - வேத சாஸ்த்ரத்திற் கூறியுள்ள, பிராயம் நூறு - நூறுவயஸும், மனிதர்தாம் புகுவரேலும்-மனிதர்கள் அடைவதாய் இருந்தாலும், பாதியும் உறங்கிப்போகும்-(அந்த நூறு வயதில்) பாதி (ஐம்பது வயஸு) தூக்கத்தில் கழிந்து போகும். நின்றதில் - மிகுந்து நின்ற ஐம்பது வயஸில்,

பதினையாண்டு - பதினைந்து வர்ஷம், பேதை பாலகன தாகும்-குழந்தைப் பருவத்தாலும் பிள்ளைப்பருவத்தா லும் கழிந்து போகும். (மிகுந்துநின்ற ஆயுள்) பிணி, பசி, மூப்பு, துன்பம் - நோயினாலும், பசியினாலும், முதுமைப் பருவத்தாலும், வருத்தத்தாலும் ஒழிந்து போகும், ஆதலால்-இக்காரணங்களால், பிறவி வேண் டேன் - அடியேன் (மனிதப்) பிறப்பை எக்காலத்தும் விரும்பமாட்டேன்.

(அதாவது) மிகவும் ப்ரஸித்திபெற்ற ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தில் கோயில் கொண்டிருக்கும் பெருமாளே, வேத சாஸ்த்ரங்களில் கூறியுள்ள வயஸு மனிதர்க ளுக்கு நூறு. அந்த நூறுவயஸும் ஒருவன் உயிரு டன் கூடி யிருப்பதாய் வைத்துக்கொண்டாலும், அதில் பாதி (அதாவது ஐம்பது வர்ஷகாலம்) நித்ரை யில் கழிந்துபோய் விடும். மீதம் இருப்பு வர்ஷம் ஐம்பது. அதில் பதினைந்து வர்ஷம் பகுத்தறியும் சக்தியில்லாத பால்யாவஸ்தையில் கழிந்துவிடுகிறது. மீதமுள்ள வர்ஷங்களில் அநேகம், நோயாலும், பசி யினாலும், முதுமைப் பருவத்தாலும், வருத்தத்தினா லும், போய்விடுகின்றன. இந்தக் காரணங்களால் ஈச்வரபக்தி செய்யக்கூடிய காலம் இல்லாமலே போய் விடுகிறது. ஆனதினால், வீண் பிறவி யெடுத்து கஷ் டப் படுவதைக்காட்டிலும், பிறவி இல்லாமலிருப்பதே நல்லதென்று எண்ணுகிறேன். அப்படியே ஸ்வாமி! நீ யெனக்கு அருள் புரிவீராக.

ரங்கநாதன் விஷயமாய் அவர் கடைசிக்காலத்

தில் செய்த பக்தி முன் செய்த குற்றங்களை யெல்லாம் போக்கடிக்கத் தக்கதென்றே சொல்லலாம்.

### தனியன்.

திருமாலைத் தனியன் திருவரங்கப் பெருமாள் அரையர் செய்தது.

மற்றொன்றும் வேண்டாமனமே மதிளரங்கர்
கற்றினம்மேய்த்த கழலிணைக்கீழ்-உற்ற
திருமாலைபாடும் சீர்த்தொண்டரடிப் பொடியெம்
பெருமானை-எப்பொழுதும் பேசு.

திருப்பள்ளி யெழுச்சித் தனியன் திருமலையாண்டானால் அருளிச் செய்யப்பட்டது.

மண்டங்குடி என்பர் மாமறையோர் மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடி தொன்னகரம்-வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத்தம்மானைப்-பள்ளி
உணர்த்தும் பிரானுதித்தவூர்.

### கடைசி நாள்.

இவர் இந்த பூலோகத்தில் 105 வர்ஷகால மிருந்து ஸ்ரீரங்க நாதனுக்கு வேண்டிய பூஜைகளைச் செய்துவிட்டு தேவலோகம் சேர்ந்தார். தேவதேவியும் இவருடைய வரலாற்றைக் கேட்டு, தன்னுடைய ஸொத்து முழுமையையும் ரங்கநாதனுக்குக் கொடுத்து விட்டு, அவர் கோயிலை விளக்கி கோலம் போட்டு ஜீவித்துக் காலத்தை கழித்துவந்தாள். கடைசியில் அவளுக்கும் ரங்கநாதன் கருணையால் நல்ல கதி கிட்டிற்று.

## தொண்டரடிப்பொடி ஆழ்வார் காலம்.

இவர் திருக்குறள் பரிச்சயமுள்ளவராயும், அப்பர் ஸ்வாமிகளின் தேவாரத்தை நன்ருய் அறிந்தவராயிருக்க வேண்டு மென்று அவர் செய்த திருமாலையிலிருந்து தெளிவாய் விளங்குகிறது. திருக்குறள் காலம், அப்பர் ஸ்வாமிகள் காலம் இவைகள் நன்ருய் தெரிந் திருக்கின்றன. ஆதலால் இந்த ஆழ்வார் கி-பி 9-வது நூற்ருண்டின் முற்பாதியில் இருந்ததாகச் சொல்ல வேண்டும்.

---

# XIV. திருப்பாணாழ்வார்.

இந்த ஆழ்வார் திருச்சினாப்பள்ளிக்கு ஸுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ள உறையூரில் கலியுகம் 343-வதான துன்மதிவர்ஷம், கார்த்திகை மாஸம் க்ருஷ்ணபக்ஷம், த்விதியை திதி, புதன்கிழமை, ரோஹணி நக்ஷத்ரத்தில் அவதரித்தார். இவர் அயோநிஜராய் ஒரு நெல்கதிரிலிருந்து அவதரித்தார். இவர் ஸ்ரீவத்ஸத்தின் அம்சம். இவரை பஞ்சம ஜாதியைச் சேர்ந்த பாணர்குலத்தில் பிறந்த ஒருவன் கண்டெடுத்தான். அவனும் அவன் மனைவியும் இவரை மிகவும் ப்ரீதியுடன் பசுவின்பால் முதலிய உயர்ந்ததும், பரிசுத்தமானதுமான ஆகாரங்களைக் கொடுத்து வளர்த்து வந்தார்கள்.

### இளமைப் பருவம்.

இவருக்கு மற்ற ஆழ்வார்களைப் போலவே விஷ்ணுபக்தி அதிகம். இவர் பாணர் குலத்துக்கு வேண்டிய பாடல்களையெல்லாம் நன்றாய்க் கற்றுவிட்டபடியால், இவருக்கு "பாணர்" என்ற ஒரு பெயர் உண்டாயிற்று. இவருக்கு பாட்டில் நல்ல ஞானம் ஏற்பட்டது. இவருடைய குலத்தை கவனியாமல், விஷ்வக்ஸேனர் ஒருவருக்கும் தெரியாமல் இவருக்குபஞ்சஸம்ஸ்காரங்களை செய்துவைத்தார்.

திருப்பாணுழ்வாரும் கோயில் பட்டரும்.

இவர் ஸ்ரீரங்கநாதன் இருக்கும் இடத்திற்குப் போனுல், ஸ்வாமிக்கு அசுத்தம் ஏற்பட்டு விடுமென்று எண்ணி, அந்த திக்கைநோக்கி காவேரியின் கரையிலிருந்து, அந்த ரங்கநாதப் பெருமாளைக் குறித்து மெய் மறந்து பாடத் தொடங்கினுர். ஸ்வாமியின் அபிஷேகத்துக்கு ஜலம் எடுக்கப்போன கோயில் பட்டர் இவரை இன்னுரென்று அறியாமல், தூரத்தில் போகும்படி உத்தரவு செய்தார். இவர் போகவில்லை. பக்கத்திலுள்ளவர்கள் கற்களை இவர்மீது எறிந்தார்கள். இவர் பக்தி மேலிட்டு, மெய் மறந்து பெருமாளைப்பற்றி பாடிக் கொண்டிருந்ததினுல், அந்த கற்கள் இவருக்கு ஒரு தீங்கையும் செய்யவில்லை. பெருமாளுக்கோ தன்னுடைய பக்தன்மீது எறியப்பட்ட கற்கள் தன்மேல் பட்டது போல் நெற்றியிலிருந்து ரத்தம் பெருகிற்று. உடனே அங்கேயிருந்த ஜனங்கள் இன்ன பிசகு செய்தோமென்று தெரியாமல், விழுந்து விழுந்து பெருமாளை நமஸ்காரஞ் செய்தார்கள். அபிஷேகத்துக்கு ஜலம் எடுக்கச் சென்றவர் பெயர் "லோக சாரங்க மா முனீந்த்ரர்."

ஆழ்வாரும் ரங்கநாதனும்.

இந்த ஆழ்வார் வழக்கப்படி தினந்தோறும் காவேரிக்கரையிலிருந்து கொண்டு பாடிக்கொண்டே வந்தார். இவரைத்தன்பக்கத்தில் அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்று பெருமாளுக்கு எண்ண முண்டா

யிற்று. உடனே லோகசாரங்காமா முனீந்த்ரரின் ஸ்வப்னத்தில் தோன்றி, ஜாதியைப்பாராமல் "பாண ரை" தன் தோளின்மீது ஏற்றிக்கொண்டு வரும்படி உத்தரவுகொடுத்தார். உடனே அந்த முனிவரும் இதர பக்தர்களுடன் போய், ஸ்னனம் செய்து, சுத்த மாய் அந்த பக்தரை திருவடிதொழுது, அவரை ஸ்ரீரங்கத்திற்கு வரும்படி கேட்டார்.

ஆழ்வார்:—"நான் ஜாதியில் சண்டாளன். நான் ரங்கநாதன் பூமியை மிதித்தால் அது அசுத்தமாய்ப் போய்விடும்."

முனிவர்:—" நீர் மிதிக்கவேண்டாம். என் தோ ள்மீது ஏறிக்கொள்ளும். நான் கொண்டுபோய் உம் மை ஸ்வாமி முன்னிலையில் சேர்க்கிறேன்."

ஆழ்வார்:—" நான் என்னபாவம் செய்தேனே இந்த ஜாதியில் பிறந்திருக்கிறேன். வைஷ்ணவ பக்த ரான உம்முடைய கால்களினல் என் தலை உதைக்கப் பட்டால் எனக்கு நல்லகதியுண்டு. அப்படிக்கிருக்க, நீர் என்னை உம்மீது ஏறிக்கொள்ளும்படி சொல்ல லாமா! என்னபாவம் எனக்கு ஏற்படும்? என்கதி என் னவாகும் ?"

முனிவர்:—"ஸ்வாமீ! நான் உம்மை என் தோள் களிலே தூக்கிக்கொண்டு பெருமாள் முன்னிலையில் வரவேண்டுமென்பது பெருமாளின் உத்தரவு. அதை த்தடுக்க உம்மாலேயும் முடியாது. எங்களாலேயும் முடியாது. ஆகையால் ஏறிக்கொள்ளும், புறப்படு வோம்."

இதைக்கேட்ட ஆழ்வார் உடம்பு நடுங்கி, உள்ளம் பதறி, வாய்பேசமுடியாமல், அப்படியே நின்றுவிட்டார். உடனே முனிவர் தன் தோள்களில் அவரை ஏற்றிக்கொண்டு அநேக பரிவாரங்களோடும், வாத்ய கோஷத்தோடும், பெருமாள் முன்னிலையில் அவரைக் கொண்டுபோய்ச் சேர்த்தார். அவர் ரங்கநாதன் கிட்டப் போனபொழுது, இருவரும் ஒன்ருய்ச் சேர்ந்துவிட்டார்கள். அப்புறம் ஆழ்வாரைக் காணவில்லை. இவர் லோகசாரங்கமா முனிவர் தோள்களில் ஏறிப் போனபடியால் இவருக்கு 'முனிவாஹனர்' என்று பெயர் உண்டாயிற்று.

### மங்களா சாஸனம்.

இந்த ஆழ்வார் மூன்று திருப்பதி பெருமாள்களைக் குறித்து பாடியிருக்கிருர். அவையாவன. (1) திருவரங்கம் (2) திருவேங்கடம் (3) பரமபதம்.

### அருளிச்செயல்.

இவர் ரங்கநாதனைக் கண்டதும் அவருடைய காலிலிருந்து தலைமுடிய வர்ணித்து பத்து ப்ாசுரங்களால் பாடினுர். அதற்கு "அமலனுதிபிரான்" என்று பெயர்.

### தனியன்

இவர் தனியன் திருமலை நம்பி செய்தது.

"காட்டவே கண்ட பாதகமல நல்லாடை யுந்தி
தோட்டருமு தரபந்தம் திருமார்புகண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்கள்மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினுற் கண்டுவாழும் ப்ாணர்தாள் பரவினேமே."

## திருப்பாணாழ்வார் காலம்.

இவர்காலம் திருமங்கை ஆழ்வாருக்கு முன்னும், தொண்ரடிப்பொடி ஆழ்வாருக்கு பின்னும் என்று ஏற்படுகிறது. இவர் செய்த பாசுரங்கள் பத்தே. ஆகவே அவைகளிலிருந்து இன்ன காலத்தில் வஸித்தார் என்று சொல்ல முடியாது. தொண்டரடிப் பொடி ஆழ்வார் காலத்துக்குப் பொதுவாய்ச் சொன்ன காரணங்களிலிருந்து இவரும் கி. பி. 9-வது நூற்றாண்டின் முற்பாதியிலேயே இருந்திருக்கவேண்டுமென்று ஏற்படுகிறது.



# XV. திருமங்கையாழ்வார்.

திருமங்கை ஆழ்வார் சீர்காழிக்கு ஸுமார் ஆறுமைல் தூரத்திலுள்ள திருவாலி-திருநகரியில் திருக்குறையலூரில் அவதரித்தார். அந்தக்காலத்தில் அந்த ஊரானது சோழ தேசத்திலுள்ள ஆலி நாட்டைச் சேர்ந்ததாயிருந்தது. இவர் கலி 398-வது நள வர்ஷம் கார்த்திகைமீ பௌர்ணமி திதி, வியாழக்கிழமை, க்ருத்திகை நக்ஷத்ரத்தில், ஸ்ரீ சாரங்கத்தின் அம்சராய் நீலன் என்பவருக்குப் பிள்ளையாய் பூலோகத்தில் பிறந்தார். இவர் தகப்பன் சோழநாட்டு அரசனுக்குக் கப்பங்கட்டி வந்த ஒரு சிறு அரசன். இவர் ஜாதியில் சூத்ரர். இப்பொழுது வழங்கிவரும் கள்ளர் ஜாதியைச் சேர்ந்தவர். இவர் விஷ்ணுவைப் போல் 'நீல' மான நிறத்துடன் கூடியிருந்தபடியால் இவருக்கு "நீலன்" என்று பெயரிட்டார்கள்.

## இளமைப் பருவம்.

இவருக்கு தைர்யம் அதிகம். விரோதிகளை ஜயிப்பதில் மிகவும் தைர்யமுடையவர். இவருடைய தைர்யத்தைக் கண்ட சோழநாட்டு அரசன் இவரைத் தன்னுடைய ஸேனாதிபதிகளில் ஒருவராக நியமித்தான். இவர் சில சத்ருக்களை அடக்கி, அரசருக்கு கீர்த்தியை உண்டாக்கினார். அதனால் அரசன் இவருக்கு

பரகாலன் என்ற பெயரைக்கொடுத்து, இவரைத் தன் கீழ் உள்ள சிற்றரசர்களில் முக்யமானவராகச் செய்தான்.

இவருக்கு பால்ய முதல்க்கொண்டே யௌவனமுள்ள பெண்களிடத்தில் ப்ரீதி அதிகம். தம்வசம் எவ்வளவு ஸ்திரீகளிருந்தாலும் வேறு அழகுடன் கூடின ஸ்திரீகளைக் கண்டால் அவர்களை தன்னுடைய காமத்துக்கு இரையாக்குவார். தான் ஆண்மைத் தனத்துடன் கூடினவர் என்பதைக் காட்டுவதற்காக எப்பொழுதும் வாளும் கையுமாய் குதிரையின்மேல் திரிவது வழக்கம். இவர் குதிரைக்கு ஆடல்மா என்று பெயர். இவருடைய மந்த்ரிகள் நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், சாயை பிடிப்பான், தாளூதுவான், தோரா வழக்கன், உயரத் தொங்குவான், யதிராசன் என்பவர்கள்.

இவரும் குமுதவல்லி நாச்சியாரும்.

கும்பகோணத்திற்கு ஆறு மைல் தூரத்தில் திருநறையூர் என்றும், நாச்சியார் கோயில் என்றும், பெயருடன் கூடின வைஷ்ணவ ஸ்தலம் ஒன்று இருக்கிறது. அதில் லக்ஷ்மிதேவி, இந்த்ரனுடைய சிங்காரத் தோப்புக்கு ஸமமான ஒரு தோப்பில் ஒரு சிறு பெண் ரூபத்துடன் குமுத புஷ்பங்களை எடுத்துக் கொண்டிருந்தாள். அங்கே சென்ற விஷ்ணு பக்தர் ஒருவர் அவளை இன்னளென்று கேட்க, வழி தப்பின ஒரு பெண் என்று தெரிந்து, தன் பெண்ணாக செல்வமாய் சீராட்டி வளர்த்து வந்தார். குமுத புஷ்பம்

எடுத்துக்கொண்டிருந்தபோது கண்டதால், அவளுக்கு குமுதவல்லி யென்று பெயரிட்டார். அவளுக்கு வயஸு ஆக ஆக, அவள் அதிக அழகு வாய்ந்தவளாகக் காணப்பட்டாள். அவளைப்பற்றின ஸமாசாரங்களை அறிந்த இந்த ஆழ்வார் அந்த வைஷ்ணவ பக்தரிடம் போய் தனக்குச் சில ஸந்தேகங்களைத் தீர்க்கவேண்டுமென்று சொல்லி, அது விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தான். வந்த கார்யம் வேறு, பேசின பேச்சு வேறு. அந்த ஸமயத்தில் குமுதவல்லி உள்ளே யிருந்துவர, அவளை இன்னாளென்று பக்தரைக் கேட்டு அறிந்துகொண்டான். பக்தர் ஜாதியில் இன்னாளென்று தெரியாமல் கொண்டு வந்ததினால், தகுந்த மாப்பிள்ளையைக் கண்டு பிடிப்பது மிகவும் கஷ்டமாக இருப்பதாய்த் தெரிவிக்க, ஆழ்வார் தானே, கல்யாணம் செய்து கொள்வதாயும், அவளுக்கு அதற்காகவேண்டிய ஆடை ஆபரணங்களைக் கொடுப்பதாயும் தெரிவித்தான். மிகவும் ஸந்தோஷத்துடன் பக்தர் தன்னுடைய பெண்ணைக் கூப்பிட்டுக்கேட்க, அவள் ஆழ்வார் விஷ்ணு பக்தரில்லை யென்றும், பஞ்ச ஸம்ஸ்காரம் பெறவில்லை என்றும், இந்த இரண்டும் இல்லாதவரையில் அவள் கல்யாணம் செய்துகொள்ள முடியாதென்றும் தெரிவித்தாள். அவள்மேலிருந்த காதலால், உடனே ஆழ்வார், அங்கே உள்ள விஷ்ணு கோயிலுக்குப் போய், அந்த ஸ்வாமியை ஸ்தோத்ரம் செய்து, பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெற்று, த்வாதச நாமங்களையும் போட்டுக்கொண்டு, குமுதவல்லியினி

டம் போய்ச் சேர்ந்தார். அவள் அது போதாதென்றும், ஒரு வர்ஷம் தினந்தோறும் 1008 வைஷ்ணவ பக்தர்களுக்கு சாப்பாடு போடவேண்டு மென்றும், அவர்கள் சாப்பிட்டதின்பின் அவர் சாப்பிடவேண்டு மென்றும், அப்படிச் செய்தால்தான் அவரைக் கல்யாணம் செய்துகொள்ள முடியுமென்றும் தெரிவிக்க, அப்படியே ஒரு வர்ஷம் அங்கேயே யிருந்து விஷ்ணு பக்தராய் தினப்படி 1008 வைஷ்ணவர்களுக்கு ததீயாராதனம் செய்வித்து, பிறகு அவளை விவாகம் செய்து கொண்டார்.

### இவரும் சோழநாட்டு அரசனும்.

இப்படி இவர் பணத்தையெல்லாம் செலவு செய்து வந்ததினால், இவர் சோழநாட்டு அரசனுக்குக் கட்டவேண்டிய கப்பத்தைச் சரியாய் கட்ட முடியவில்லை. அரசன் பலவாறு கேட்டும் "இப்பொழுது, சாயங்காலம், நாளைக்கு" என்று ஏமாற்றிக்கொண்டு வந்தார். அதன்மேல் அரசன் தன்னுடைய ஸைன்யத்தை அனுப்பி இவரைப் பிடித்து சிறையிலிடும் படிக்கும், ராஜ்யத்தை இவரிடமிருந்து பிடுங்கும் படிக்கும், தன்னுடைய ஸேனாதிபதிக்கு உத்தரவு கொடுத்தான். ஸேனாதிபதி இவருடன் சண்டைக்கு வர, இவர் அவனை நன்றாய்த் தோற்கடித்து ஊருக்கு அனுப்பி விட்டார். அரசனுக்கு அடங்காத கோபம் உண்டாயிற்று. தானே ஒரு பெரிய ஸைன்யத்துடன் வந்து சண்டை செய்தான். ஆழ்வாரோ அவனைத் தோல்வி

அடையச் செய்ததுமன்றி, அநேக வீரர்களை தன்னுடைய கத்திக்கு இறையாக்கினார். சோழ நாட்டு அரசனைக் கொல்ல மனம் வராமல் என்ன செய்வதென்று யோசித்துக்கொண்டு நின்றார். அப்பொழுது அரசன் இவரிடம் வஞ்சகமாய், தான் இவருடைய சூரத்தனத்தை மிகவும் மெச்சினதாகவும், தனக்கு கோபம் ஒன்றும் கிடையாதென்றும், தனக்குக் கட்டவேண்டிய பணத்தைத் தருவதாய் ஒத்துக் கொண்டால் தான் ஊருக்கு ஸந்தோஷமாய்த் போவதாயும் சொல்லிக்கொண்டே ஆழ்வார் அருகில் போய், கபடமாய் ஆழ்வாரைக் கைதி செய்துவிட்டான். அரசன் மந்த்ரியினிடம் ஆழ்வாரை ஒப்பித்து விட்டுத் தான் நாட்டுக்குப் போனான். ஆழ்வார் ஒரு கோயிலில் அடைக்கப்பட்டார். பெருமாள் க்ருபையால் காஞ்சீபுரத்துப் பெருமாளான "பேரருளாளன்" ஸ்வப்னத்தில் தோன்றி தான் பணம் கொடுப்பதாய்ச் சொல்லி காஞ்சீபுரத்திற்கு வரும்படிக்கு உத்தரவு கொடுத்தார். ஆழ்வார் தகுந்த பந்தோபஸ்துடன் காஞ்சீபுரம் அழைத்துக் கொண்டு போகப்பட்டார். எண்ணினவிடத்தில் பணத்தைக் காணாமல் மிகவும் வருந்தினார். பிறகு பெருமாள் கருணையால் வேண்டிய பணத்தை வேகவதி நதிக்கரையில் கண்டு அரசனுக்குக் கொடுத்துவிட்டு மீதத்தை பக்தர்களை பூஜிப்பதற்காக வைத்துக்கொண்டார். இதையெல்லாம் கேட்ட அரசனுக்கு இவர் மனிதரில்லையென்றும், தெய்வப்பிறவியென்றும் எண்ணி, அந்தப் பணத்தையும் தன்னிடமிருந்த

பணத்தையும் தான் செய்த குற்றங்களுக்கு அபராதமாக இவருக்கே அனுப்பிவிட்டான். இவரோ எல்லாவற்றையும்,

"ஆராதனும் ஸர்வேஷாம்
விஷ்ணோ ராராதனம் பரம்!
தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம்
ததீயாராதனம் பரம்."

என்றபடி, விஷ்ணுபக்தர்களுக்கு அன்னம் இடுவதில் செலவு செய்துவிட்டுக் கடைசியாய் கையில் பணம் இல்லாமல் திகைத்தார்.

### இவரும் விஷ்ணு பகவானும்.

நித்யம் 1008 பேர்களுக்குக் குறையாமல் அன்னம் அளிப்பதை ஒரு வ்ருதமாக வைத்துக் கொண்டிருந்த படியால், இவர் தன்னுடைய மந்த்ரிகளுடன் போய் வழிப்பறி பறித்து, கொள்ளையடித்து, அதனாலுண்டான பணத்தைக்கொண்டு பக்தர்களை பூஜித்து வந்தார். இவருக்கு தர்சனம் கொடுக்க எண்ணி விஷ்ணு ப்ராம்மண வேஷம் பூண்டு, லக்ஷ்மி தேவியுடன் ஸகலமான ஆபரணங்களையும் தனக்கும் லக்ஷ்மி தேவிக்கும் போட்டுக்கொண்டு ஆழ்வாருடைய கொள்ளைக் கூட்டம் இருக்கும் பக்கமாய்ப் போனார். ஆழ்வாரும் அவர்களைக் கண்டு தனக்குத் தகுந்த வரும்படி வந்ததென்ற உத்ஸாகத்துடன் அவர்களுடைய ஆடை ஆபரணங்களை யெல்லாம் திருடிக்கொண்டார். ஸ்வாமி காலில் ஒரு நல்ல ஆபரணம் இருந்தது.

அதைக் கழற்ற முடியாமலிருந்ததால் ஆழ்வார் தன் பற்களால் கடித்து எடுத்துக்கொண்டார். இதைக் கண்ட பெருமாள், புன்சிரிப்புடன் அவருக்கு 'கலியன்' என்று பெயரிட்டார். ஆழ்வார், அவர்கள் முன்னிலையில் நகைகளை யெல்லாம் பெரிய மூட்டையாகக் கட்டி எடுக்கும்பொழுது அதைத் தூக்கமுடியவில்லை. உடனே ஆழ்வார், வந்தவர் ஏதோ மந்த்ரம் போட்டுவிட்டாரென்றும், அதை எடுக்காவிட்டால் அவரை அப்படியே கொன்று விடுவதாயும் பயமுறுத்தினர். அதைக் கேட்ட ப்ராம்மணர் இவருக்கு அந்த மந்த்ரத்தை உபதேசிப்பதாய்ச் சொல்லி, அருகில் அழைத்து இவர் கழுத்தில் கையைப் போட்டுக்கொண்டு காதில் "ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்தம்" (எல்லாம் திரு அஷ்டாக்ஷரத்தில் உள்ளடங்கி யிருக்கிறது.) என்கிறபடியுள்ள பெரிய திருமந்த்ரத்தை அவருக்கு உபதேசம் செய்துவிட்டு கருட வாஹனத்தில் ஏறிக்கொண்டு லக்ஷ்மீ தேவியுடன் அவர் முன்னே விளங்கினர். இதைக் கண்ட ஆழ்வார் உடனே மிகவும் ஞானியாகி, பெரிய திருமந்த்ரத்தின் மஹிமையைக் குறித்துப் பாடத்தொடங்கினர்.

### ஆழ்வாரும் சிவபக்தர்களும்.

இதன் பிறகு திருமங்கை ஆழ்வார் தன் மனைவியுடன் ஆலயங்கள் தோறும் போய் ஸ்வாமி தர்சனம் செய்து வந்தார். இவர் தமிழ்க் கவிகளைச் செய்வதில் மிகவும் கெட்டிக்காரராய் விளங்கியதால், இவரை

நாலுகவிப் பெருமாள் என்று சொல்லுவது வழக்கம். அதாவது ஆசு, மதுரம், சித்ரம், விஸ்தாரம், ஆகிய நான்கு விதக் கவிகளையும் பாடும் சக்தியுள்ளவர். இவர் முதலில் வட இந்தியாவிலுள்ள இடங்களுக்குப் போய் பிறகு கடைசியாய் சீர்காழிக்கு வந்தார். அங்கேயுள்ள விஷ்ணு பக்தர்கள் இவரைப் பின்வருமாறு உபசரித்தார்கள். "நாலுகவிப் பெருமாள் வந்தார்."; "நம் கலியன் வந்தார்".; "ஆலிநாடார் வந்தார்"., "அருள் மாரி வந்தார்"; "கொங்கை குமலர்க் குழலியர் வந்தார்"; "மங்கை வேந்தர் வந்தார்"; "பரவாதி மத்தகஜ கண்டிரவர் வந்தர்;" அங்கேயுள்ள திருஞான ஸம்பந்த மூர்த்தியின் சிஷ்யர்கள் இவர் அவ்வளவு பட்டங்களுக்கு தகுந்த பண்டிதரில்லையென்று சொல்லி வாது செய்தார்கள். உடனே ஆழ்வார் தன்னுடைய பராக்ரமத்தைக் காட்டுவதற்காகத் திருஞான ஸம்பந்த மூர்த்தியை வாதத்துக்கு அழைத்தார். அவர் இவருடைய வைபவத்தை அறிந்து ஒரு வைஷ்ணவ பக்தர்கூட இல்லாததும் தன்னுடைய சிஷ்யர்கள் மிகுந்ததுமான ஒரு இடத்திற்கு இவரை வரும்படி வேண்டி அழைக்க, இவரும் அப்படியே ஆகட்டும் என்று போனார். அங்கே போனதும் பூஜை செய்ய ஸாளிக்ராமமாவது, விஷ்னு ஆலயமாவது இல்லாததைக்கண்டு விஸனமடைந்தார். அந்த ஸமயத்தில் இவரைக்கண்டு தர்சிக்க ஒரு வைஷ்ணவக் கிழவி வந்தாள். இவர் அவளிடமிருந்த ஸாளிக்ராமத்தை அடைந்து, பூஜை செய்து விட்டு திருஞான ஸம்பந்த

மூர்த்தியினிடம் வாதத்தை ஆரம்பித்தார். நாயனர் இவரை முதலில் ஒரு பாட்டுப் பாடச் சொல்ல இவர் பின்வரும் பாசுரத்தைப் பாடினர்.

"ஒரு குறளாயிரு நிலம் மூவடி மண் வேண்டி
யுலகனைத்து மீரடியா லொடுக்கி ஒன்றும்
தருகவெனுமாவலியைச் சிறையில்வைத்த
தாடாளன் தாளணை வீர்தக்க வேள் வியைந்தும்
அங்கங்களவையாறு மிசைகளேழும்
தெருவில் மலிவிழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே.'

இதை முதற்பாட்டாக பாடியவுடனே நாயனருக்கு என்ன பதில் அளிப்பதென்று தெரியவில்லை. தன் கையிலிருந்த வேலாயுதத்தை இவருக்குக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டு, இவ்வளவு மர்யாதைகளுக்கு இவரே தகுந்தவரென்று சொல்லி விட்டுப்போனர். திருமங்கையாழ்வார் ஊர் ஊராய்ச் சுற்றி ஸ்ரீரங்கத்திற்குப் போனர்.

ஆழ்வாரும் ரங்கநாதரும்.

இவர் ரங்கநாதனை தர்சித்தது முதல் உண்டான உத்ஸாஹத்தைச் சொல்லி முடியாது. அந்தக் கோயிலுக்கு மதிலும் கோபுரமும் கட்ட எண்ணினர். பணம் வேண்டியிருப்பதைத் தன் மந்த்ரிகளிடம் தெரிவிக்க அவர்கள் நாகப்பட்டணத்தில் பொன்னால் செய்த புத்த விக்ரகம் இருப்பதாய்த் தெரிவித்தார்கள். உடனே இவர் அவர்களுடன் ஒருவருக்கும் தெரியாமல் அங்கேபோய்ச் சேர்ந்தார்.

## ஆழ்வாரும் புத்த விக்ரகமும்.

ஒரு நேர்த்தியான கோயிலுக்குள் அந்த விக்ரகம் இருப்பதாய்த் தெரிந்தது. அந்தக் கோயிலுக்குக் கதவு எங்கே யிருக்கிறதென்று தெரியவில்லை. கூர்மையாய்ப் பார்த்தபொழுது ஒரு சக்ரம் கூர்மையான பற்களுடன் அதிக விரைவாய் சுற்றிக்கொண்டிருந்தது. ஒரு பெரிய வாழைத் தோட்டத்தை அழித்து அங்கேயுள்ள வாழைத் தண்டுகளை சிறிய சிறிய துண்டுகளாய் நறுக்கி அந்த சக்ரத்தின் பற்களுக்கு இடையே கொடுக்க, அது வாழை நூல்களால் மூடப்பட்டு சுழலாமல் நின்றது. உடனே ஒருவன் கீழே இறங்கிப்பார்க்க ஒரு விலை மதிக்க முடியாத தங்க பிம்பம் காணப்பட்டது. அவனைக் கண்டதும் அது ஓட்டம் பிடித்தது. மேலேயிருந்து ஆழ்வார் ஜபித்த மந்த்ரத்தின் பலத்தால் அந்த விக்ரகம் கீழே விழுந்தது.

ஆழ்வார் அதை யெடுத்து, உடைத்து அதைக் கொண்டு ஸ்ரீரங்கநாதனுக்கு வேண்டிய மதில்களையும், கோபுரங்களையும் கட்டினார். மதில் கட்டும் ஸமயத்தில் முன்பு ஸ்ரீதொண்டரடிப்பொடி ஆழ்வார் பெருமாள் பூஜைக்காக திருமாலைக் கட்டிவந்த இடம் நேர்ப்பட, அதை விட்டு விட்டு ஒதுக்கி மதிலைக்கட்டி முடித்தார். இதைக் கண்ட ரங்கநாதன் இவருக்கு "அருள்மாரி" என்ற பெயரிட்டார். பிறகு இவர் தெற்கேயுள்ள விஷ்ணு ஸ்தலங்களுக்கெல்லாம் போய் மறுபடி ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். அப்பொ

மூது ஈச்வரனை ஸ்தோத்ரம் செய்து அவரது உத்தரவால் ஆழ்வார் திருநகரியிலிருந்த "நம்மாழ்வாரை" அங்கே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து மார்கழி மாஸத்தில் வைகுண்ட ஏகாதசி முதல் பத்து நாள் உத்ஸவம் செய்வித்து, அதில் வேதங்களையும் தமிழ் வேதமான ஆழ்வார்களின் பாசுரங்களையும் பாடும்படி செய்வித்து மறுபடியும் பத்து நாள் ஆனதும் "நம்மாழ்வாரை" ஆழ்வார் திருநகரிக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார். அன்று முதல் வைகுண்ட ஏகாதசி உத்ஸவம் (வைஷ்ணவர்கள் இதை அத்யயன உத்ஸவம் என்பார்கள்) எங்கும் நடந்து வருகிறது.

## இவரும் கலிகாலமும்.

இவர் கலிகாலத்திலுண்டான கஷ்டங்களை யெல்லாம் போக்கும்படி ஈச்வரனைக் குறித்துப் பாடிய படியாலும் திருடிக்கூட விஷ்ணு பக்தர்களுக்கு வயிறார அன்னம் அளித்ததினாலும் இவருக்கு "கலிகன்றி" என்று ஒரு பெயர் கிடைத்தது.

## அருளிச்செயல்.

நம்மாழ்வார் முன்பு அருளிச் செய்த நான்கு வேதங்களின் ஸாரங்களான நான்கு ப்ரபந்தங்களுக்கும், ஆறு அங்கங்களாகும்படி, இவர் ஆறு அருமையான நூல்களை செய்தருளினர். அவையாவன,

ஆசுகவியாக பெரியதிருமொழி ... 1084
மதுரகவியாக திருக்குறுந்தாண்டகம் ... 20

ஆக கவி நான்குக்கு நூல்கள் ஆறுக்கு பாசுரங்கள் 1253. இந்த ஸங்க்யை விஷயத்தில் அபிப்ராய பேதங்கள் ரொம்பவுமிருக்கின்றன.

மங்களா சாஸனம்.

திருமங்கை ஆழ்வார் அநேக வைஷ்ணவ ஸ்தலங்களுக்கு அநேக தடவை போயிருக்கிறார். இவர் 86 திவ்ய ஸ்தலங்களின் பெருமாள்களைக் குறித்து பாடியிருக்கிறார். அவையாவன:—

(1) உறையூர், (2) தஞ்சைமாமணிக்கோயில், (3) திருக்கரம்பனூர், (4) திரு அட்டபுயகரம், (5) திருவிண்ணகரம், (6) அன்பில், (7) ஆதனூர், (8) இந்தளூர், (9) ஊரகம், (10) கண்டியூர், (11) காரகம், (12) திருக்கார்வானம், (13) திருக்காவளம்பாடி, (14) திருக்காழிச் சீராமவிண்ணகரம், (15) கூடலூர், (16) சாளக்ராமம், (17) சித்ரகூடம், (18) திருச்சிறுப்புலியூர், (19) திருச்செம்பொன் செய்கோயில், (20) திருத்தலைச் சங்கநாண்மதியம், (21) திருக்கடன்மல்லை, (22) சிங்கவேழ் குன்றம் (அஹோபிலம்) (23) திருக்கடிகை, (24) திருக்கண்ணங்குடி, (25) திருக்கண்ணபுரம், (26) திருக்கண்ணமங்கை, (27) திருக்கள்வனூர், (28) திருக்குடந்தை, (29) திருக்குறுங்குடி, (30) திருக்

கூடல், (31) திருக்கோஷ்டியூர், (32) திருக்கோவலூர், (33) திருச்சேறை, (34) திருத்தண்கா, (35) திருத் தண்கால், (36) திருத்தெற்றியம்பலம், (37) திருத்தே வனூர் தொகை, (38) திருநறையூர், (39) திருநாகை, (40) திருநாவாய், (41) திருநின்றவூர், (42) திருநீர் மலை, (43) திருப்பாற்கடல், (44) திருப்பிரிதி, (45) திருப்புட்குழி, (46) திருப்புலியூர், (47) திருப்புல் லாணி, (48) திருப்பேர் நகர், (49) திருமணிக் கூடம், (50) திருமெய்யம் (51) திருமாலிருஞ் சோலை மலை, (52) திருமூழிக்களம், (53) திருமோகூர், (54) திருவயிந்திரபுரம், (55) திருவயோத்தி, (56) திருவ ரங்கம், (57) திருவல்லவாழ், (58) திருவல்லிக்கேணி, (59) திருவழுந்தூர், (60) திருவாய்ப்பாடி, (61) திரு வாலி, (62) திருவிடவெந்தை, (63) திருவிண்ணகர், (64) திருவெவ்வளூர் (65) திருவெள்ளக்குளம், (66) திருவெள்ளறை, (67) திருவெள்ளியங்குடி, (68) திரு வெஃகா, (69) திருவேங்கடம், (70) துவாரகை, (71) திருநந்திபுர விண்ணகரம், (72) திருநீலாத்திங்கள் துண்டம், (73) திருநீரகம், (74) நைமிசாரண்யம், (75) பரமபதம், (76) திருப்பரமேச்வர விண்ணகரம் (77) திருப்பவளவண்ணம், (78) திருப்பாடகம், (79) திருப் பார்த்தன் பள்ளி, (80) திருப்புள்ளம் பூதங்குடி, (81) திருமணி மாடக்கோயில் (82) திருவடமதுரை, (83) திருவண் புருஷோத்தமம், (84) பதரிகாச்ரமம், (85) திருவெளுக்கை, (86) திருவைகுந்த விண்ணகர்.

### வேறு பெயர்கள்.

இந்த ஆழ்வாருக்கு அனேக பெயர்கள் உண்டு. சிலவற்றை மட்டிலும் அங்கங்கே எடுத்துச் சொன்னோம். இங்கே இன்னும் சிலவற்றை குறிப்பிடுகிறோம்.

(1) பரகாலன், (2) கலியன், (3) கலித்வம்ஸன், (4) லோகதிவாகரன், (5) சதுஷ்கவிசிகாமணி, (6) ஷட்ப்ரபந்தகவி, (7) கலிவைரி, (8) நீலஙிறத்தர், (9) நீலர், (10) நாலுகவிப்பெருமாள், (11) மங்கையர்கோன், (12) ஆலிநாடன், (13) அருள்மாரி, (14) கொற்றவேலோன், (15) திருமங்கை மன்னன்.

### கடைசி நாட்கள்.

இந்த ஆழ்வார் திருக்குருங்குடியில் 150 வர்ஷ காலம் குமுதவல்லித் தாயாரோடு நம்பியென்ற பெயருடன் கூடிய அந்த ஊர் பெருமாளுக்கு வேண்டிய ஊழியங்களைச் செய்து பிறகு தேவலோகம் சென்றார்.

### தனியன்கள்.

இவருக்கு அநேக தனியன்கள் இருக்கின்றன. பெரிய திருமொழிக்கு மூன்று தனியன்கள் உண்டு. அவற்றுள் எம்பெருமானார் செய்தது வருமாறு.

"வாழி பரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர் வாழ்வேந்தன் வாழியரோ
மாயோனைவாள் வலியால் மந்திரங்கொள்மங்கை
யர்கோன்
தூயோன் சுடர்மானவேல்."

ஆழ்வான் செய்தது ஒன்று.

எம்பார் செய்தது பின்வருமாறு.

எங்கள் கதியே! இராமானுச முனியே !
சங்கை கெடுத்தாண்ட தவராசா! பொங்குபுகழ்
மங்கையர் கோனீந்த மறை யாயிரமனைத்தும்,
தங்குமனம் நீ எனக்குத்தா.

பெரிய திருமடல், சிறிய திருமடல் இரண்டிற்கும் பிள்ளை திருநறையூரரையரால் தனியன்கள் செய்யப் பட்டன.

### திருமங்கை ஆழ்வார் காலம்.

இவர் பரமேச்வர விண்ணகரம் ! என்று சொல் லப்படும் காஞ்சீபுரத்திலுள்ள வைகுண்டப் பெரு மாள் ஸன்னிதியைக் குறித்து பாடியிருக்கிறார். அதில் பல்லவ அரசர்களின் பெருமையைக் குறித்தும் பாடி யிருக்கிறார். ஆதலால் அந்தக் காலத்தில் கூட பல் லவ அரசர்கள் பராக்ரமசாலிகளா யிருந்திருக்கவேண் டும். நந்திவர்மன் தன் எதிரிகளை சங்கரமங்கை, மண் ணைக்குடி, நெல்வேலி, அழிந்தியூர், புகழியூர், முதலிய இடங்களில் தோற்கடித்ததாக தெரிகிறது. இந்தச் சண்டைகளை இவர் தம் பாசுரங்களில் வர்ணித்திருக் கிறார். ஆதலால் இவர் கி. பி. 9-வது நூற்றாண்டின் முற்பாதியில் வஸித்திருந்த நந்திவர்மன் என்ற பல் லவ அரசன் காலத்தில் வஸித்திருக்க வேண்டும்.

---

## XVI. பொது விஷயங்கள்.

### நாலாயிரப்ரபந்தம்.

நாலாயிரப்ரபந்தம் என்பது ஆழ்வார்கள் அருளிச் செய்த நூல்களின் பொதுப்பெயராகும். ஒவ்வொரு ஆழ்வாரும் செய்தருளிய நூல்களின் பெயரையும், செய்யுளின் தொகையையும் கீழே குறிப்பிடுகிறோம்.

| | | |
|---|---|---|
| பொய்கை ஆழ்வார் | | ... 100 |
| முதல் திருவந்தாதி | | |
| பூதத்தாழ்வார் | | ... 100 |
| இரண்டாம் திருவந்தாதி | | |
| பேயாழ்வார் | | ... 100 |
| மூன்றும் திருவந்தாதி | | |
| திருமழிசை ஆழ்வார் | | ... 216 |
| நான்முகன் திருவந்தாதி | ... 96 | |
| திருச்சந்த விருத்தம் | ... 120 | |
| நம்மாழ்வார் | | ... 1296 |
| திருவிருத்தம் | ... 100 | |
| திருவாசிரியம் | ... 7 | |
| திருவாய்மொழி | ... 1102 | |
| பெரிய திருவந்தாதி | ... 87 | |

| | | |
|---|---|---|
| மதுரகவி | | ... 11 |
| கண்ணினுண் சிறுத்தாம்பு | | |
| குலசேகர ஆழ்வார் | | ... 105 |
| பெருமாள் திருமொழி | | |
| பெரியாழ்வார் | | ... 473 |
| பெரிய திருமொழி | | |
| ஆண்டாள் | | ... 173 |
| திருப்பாவை | ... 30 | |
| நாச்சியார் திருமொழி | ... 143 | |
| தொண்டரடிப்பொடி ஆழ்வார் | | ... 55 |
| திருப்பள்ளி எழுச்சி | ... 10 | |
| திருமாலே | ... 45 | |
| திருப்பாணாழ்வார் | | ... 10 |
| அமலனாதி பிரான் | | |
| திருமங்கை ஆழ்வார் | | ... 1253 |
| பெரிய திருமொழி | ... 1084 | |
| திருக்குறுந்தாண்டகம் | ... 20 | |
| திருநெடுந்தாண்டகம் | ... 30 | |
| திருவெழிக் கூற்றிருக்கை | ... 1 | |
| சிறிய திருமடல் | ... 40 | |
| பெறிய திருமடல் | ... 78 | |
| ராமானுஜ நூற்றந்தாதி | ... 108 | |
| திருவரங்கத்தமுதனார் செய்தது. | | |

ஆக 24 - நூல்களின் மொத்தம் 4000. இது வேதாந்த தேசிகரின் சிஷ்யர்களான வைஷ்ணவர்

களின் அபிப்ராயம். ஏனென்றால் வேதாந்த தேசிகர் தாம் செய்த ப்ரபந்த ஸாரத்தில் இவ்விதமே அருளிச் செய்திருக்கிறார்.

அப்புள்ளார் சிஷ்யர்கள் எல்லாரும் ராமானுஜ நூற்றந்தாதியைக் கணக்கில் சேர்க்காமல் பெரிய திருமடல் 148½ பாசுரங்களென்றும், சிறிய திருமடல் 77½ பாசுரங்களென்றும், ஆக பாசுரங்கள் 4000 என்றும் சொல்லுகிறார்கள்.

சிலர் அப்புள்ளார்ச் செய்த “வாழித் திருநாமத்திற்” சில பிசகுகள் இருக்கின்றனவென்றும், அதனால் அவர் அப்படி அருளிச்செய்யவில்லை என்றும் சொல்லுகிறார். மடல் இலக்கணப்படி இரண்டு மடல்களும் இரண்டு பாசுரங்களென்றும் சொல்லுகிறார்கள். அப்படிக் கணக்கிட்டால் மொத்தம் பாசுரங்கள் 3776 ஆகின்றன. இத்துடன் நூற்றந்தாதியைச் சேர்க்க பாசுரங்கள் 3884 ஆகின்றன. 4000-க்கு 116 பாசுரங்கள் குறை. ஐம்பது நூறு குறைந்த கால்களுடன் கூடின மண்டபத்திற்கு ஆயிரக்கால் மண்டபம் என்பதுபோல், 116 பாசுரங்கள் குறைந்துள்ள இவற்றிற்கு 4000 திவ்யப்ரபந்தம் என்பது பொருந்தும் என்கிறார்கள்.

இந்தச் சண்டையை விட்டுவிட்டு அவரவர் ஆச்சார்யர் உபதேசப்படியும் தங்கள் தங்கள் அறிவிற்கு தகுந்தபடியும் கண்டுகொள்வதே நல்லது. தொகை என்னவானாலும் நூல்கள் ஒன்றுதான். நூல்களைப் பற்றி கக்ஷியில்லை.

## ஆழ்வார்களின் ஜாதி.

ஆழ்வார்களின் ஜாதியைப்பற்றி அங்கங்கே எடுத்து கூறியிருக்கிறோம். பொய்கை ஆழ்வார்; பூதத்தாழ்வார்; பேயாழ்வார்; ஆண்டாள் ஆகிய நால்வரும் அயோநிஜர்கள். திருப்பாணாழ்வாரும் அயோநிஜர்தான். ஆனால் அவரை ஒரு சண்டாளன் எடுத்து வளர்த்தான்; திருமழிசை ஆழ்வார் ஒரு ரிஷிக்குப் பிறந்தார், ஆனால் அவரை ஒரு வேளாளன் வளர்த்து வந்தான். ஆதலால், வளர்ப்பால் திருப்பாணாழ்வாரும், திருமழிசை ஆழ்வாரும் சூத்ரர்கள். நம்மாழ்வாரும், திருமங்கை ஆழ்வாரும் சூத்திர ஜாதியிலேயே பிறந்து வளர்ந்தவர்கள். குலசேகர ஆழ்வார் க்ஷத்ரியர். மதுரகவி ஆழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார், ஆகிய மூவரும் ப்ராம்மணர்கள். ஆகவே பக்தர்கள் எந்த ஜாதியிலுமிருக்கலாமென்று இவர்களுடைய திவ்யவைபவங்களிலிருந்து நன்றாய் விளங்கும்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்.



PRINTED BY THOMPSON & CO., AT THE "MINERVA" PRESS,
33, POPHAM'S BROADWAY, MADRAS.

## 'ஜனுபிமானி' ப்ரசுரங்கள்.

1. காதல் வெற்றி. விலை அணு 4.

இது ஒரு இனிய நாவல். இதில் ஒரு பெண் தனது மனஸுக்குப் பிடிக்காத பையனைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பாமல் தனது நெருங்கின பந்துவும் பால்ய நேசனுமாகிய ஒரு வாலிபனைக் கல்யாணம் செய்துகொண்ட கதை விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இதில் புருஷனை எதிர்த்துப் பேசும் ஸ்திரீகளின் ஸ்வபாவமும், வைதீகர்களினுடைய வேடிக்கையான செய்கைகளும், மனைவிக்கு அடங்கி நடக்கும் புருஷர்களின் இயல்பும், விரிவாக எழுதப்பட்டிருக்கின்றன.

2. அன்புக்கும் அழிவோ? விலை அணு 5.

இது ஒரு இனிய நாவல். ரொம்ப அன்யோன்யமாயிருந்த புருஷன் பெண்சாதி ஆகிய இருவர்களை, புருஷனின் தாயார் மருந்து வைத்துப் பிரிப்பதும, நாட்டுப்பெண் தன் புருஷனுடைய ப்ரியத்தை இழந்து துக்கப்படுவதும், தெய்வ வசத்தால் தாயார் தன் பிள்ளையின் மருந்தை எடுத்து, பிள்ளையையும்நாட்டுப்பெண்ணையும் ஒன்று சேர்த்து வாழவடுவதும் இதில் தெளிவாகவும், ரஸமாகவும் எழுதப்பட்டிருக்கின்றன.

3. பெற்ற மனம் பித்து. விலை அணு 2.

இது ஒரு சிறு கதை. பிள்ளையினிடம் வாஞ்சையுள்ள ஒரு க்ராமமுனஸிபின் பிள்ளை அவரோடு கோபித்து ஓடிவிட, அவர் துக்கப்படுவதும், தேடப்போன ஆட்களின் வினோதப் பேச்சுகளும் நடவடிக்கைகளும், பாலர்களுடைய ப்ரதாபங்களும் வாசிக்க இனிமையாயிருக்கும்.

4. ஹாஸ்ய மஞ்சரி. விலை அணு 6.

இதில் அநேக வேடிக்கைக் கதைகளும் ஸம்பாஷணைகளும் அடங்கியிருக்கின்றன. பாடசாலைகளில் உபாத்யாயர்கள் கேட்கும் கேள்விக்குப் பிள்ளைகள் கூறும் சாதுர்யமான மறுமொழிகள், கோர்ட்டுகளில் ஸாக்ஷிகள், வக்கீலகள், ஜட்ஜுகள் முதலியவர்களுக்குள் நடக்கும் வேடிக்கையான ஸம்பாஷணைகள், காதலர் காதலிகளுக்கும் நடக்கும் ஹாஸ்யமும் ச்ருங்காரமுமான ஸம்பாஷணைகள், அசட்டுப் பேச்சுகள் முதலிய 160 வேடிக்கைக் கதைகள் அடங்கியிருக்கின்றன.

5. ஸஸேமிரா. விலை அணு 2.

இது ஹிந்து புராதனக் கதைகளில் ஒன்று. தெய்வீக சக்தி வாய்ந்த குருவினிடம் ஒரு அரசன் விபரீத எண்ணங் கொண்டு அவரைக் கொலை செய்ய உத்தரவிடுவதும், அவரை மந்த்ரி காப்பாற்றி வைப்பதும், ராஜகுமாரன் மித்ரத்ரோகம் செய்து அதனால் பைத்யம் பிடித்து ஸஸேமிரா என்று சொல்லிக்கொண்டு திரிய அவனை அந்த குருவே குணப்படுத்துவதும் இதில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

6. தாதாபாய் நௌரோஜி. விலை அணு 3.

இதில் காலஞ்சென்ற தாதாபாய் நௌரோஜியின் ஜீவ்ய சரித்ரமும் அவர் எழுதிய ஸ்வசரித்ரமும், அவரது குணாதிசய விவரங்களும், அவர் வயோதிக காலத்தில் வாழ்நாளைக் கழித்த விவரங்களும் அடங்கியிருக்கின்றன.

7. வளையல் உடன்பாடு. விலை அணு 2.

இது வீரரஸம் பொருந்திய ஒரு ரஜபுத்ரக்கதை, ரஜபுத்ர ஸ்திரீகள் தங்களுக்கு ஆபத்து நேர்ந்தகாலத்தில் ரஜபுத்ர வீரர்களை உதவி கேட்கும் வளையல் உடன்பாடு என்னும் வழக்கம் இதில் கதா ரூபமாக விளக்கப்பட்டிருக்கிறது.

8. யுக்தி போதினி. விலை அணு 10.

இதில் பலவகைப்பட்ட வஸ்த்ரங்கள், உலோகங்கள், உலோக ஸாமான்கள், நகைகள், எலும்பு ஸாமான்கள், தந்த ஸாமான்கள், கண்ணாடிகள், கண்ணாடி ஸாமான்கள் முதலியவைகளை சுத்தம் செய்தல், துணிகளிலும், வேறு பொருள்களிலும் விழுந்துள்ள கறைகளைப் போக்குதல், பழங்கள் புஷ்பங்கள், முட்டைகள், உலோகங்கள் புஸ்தகங்கள் முதலியவைகளைக் கெடாமல் வைத்திருத்தல், பொருள்களின் தன்மையைப் பரீக்ஷித்தல், கடியாரங்கள், ஜோடுகள், மேஜோடுகள், விளக்குகள், பீங்கான் பாத்ரங்கள், கண்ணாடிப் பாத்ரங்கள், லீஸாக்கள் முதலியவைகளின் பராமரிப்பு, தொழில் ஸம்பந்தமான செய்முறைகள், உபத்ரவம் செய்யும் ப்ராணிகளைத் தொலைத்தல், முதலிய நூற்றுக்கணக்கான விஷயங்களைப் பற்றி ஸுலபமான யுக்திகள் அடங்கியிருக்கின்றன.